ஆதிசங்கரர் அருளிச்செய்த

# ஸௌந்தர்ய லஹரி



தமிழ்க்கவியாக்கம் :
குற்றாலம் வள்ளிநாயகம்

சிறப்பு வெளியீடு :
ஸ்ரீ தச மஹா வித்யாபீடம் டிரஸ்ட்

ஆதிசங்கரர் அருளிச்செய்த

# ஸௌந்தர்ய லஹரி

சிறப்பு வெளியீடு :
**ஸ்ரீ தச மஹா வித்யாபீடம் டிரஸ்ட்**
நெ,8/15, தாரகேஸ்வரி நகர் 1வது தெரு,
செம்பாக்கம், சென்னை - 600 073

சௌந்தர்யலஹரி (தமிழாக்கம்)
விசேஷப்பதிப்பு -ஜனவரி 2014

தமிழ்க் கவியாக்கம் :
**குற்றாலம் வள்ளிநாயகம் ©**

சிறப்பு வெளியீடு :
**ஸ்ரீ தச மஹா வித்யாபீடம் டிரஸ்ட்**
நெ,8/15, தாரகேஸ்வரி நகர் 1வது தெரு,
செம்பாக்கம், சென்னை - 600 073
போன் : 044-22780241
கைபேசி : 7299051505

கிளாசிக் பிரின்ட்ஸ்
23/11, பாரதி சாலை
பெரம்பூர், சென்னை-11

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி**
**ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**
காஞ்சிபுரம் 631 503.

முகாம் : துளசிச்யாம் தேதி 19-11-80
(ஸௌராஷ்டிரம்)

# ஸ்ரீமுகம்

ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாள் கேதாரத்திலிருந்து கைலாசம் சென்று பரமேசுவரனை துதித்து தம் பூஜைக்கென ஸ்படிக லிங்கங்களையும் ஜனங்கள் யாவரும் துதித்து வழிபடுவதற்கு அம்பிகையின் மஹிமைகளையும் ஸௌந்தர்யங்களையும் வர்ணிக்கும் மந்திர சாஸ்திரதத்வங்களையும் கொண்டதுமான '**ஸௌந்தர்ய லஹரி**' என்ற மிகச்சிறப்பான நூலையும் கொண்டு வந்தார்கள். இப்பெருமை வாய்ந்த ஸ்தோத்திர நூலை திருச்சி **வள்ளிநாயகம்** தமிழில் மொழிபெயர்த்திருக்கிறதைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தோம். மொழிபெயர்ப்பு பகவத் பாதரின் வழியையொட்டி எளிதாக செய்யப்பட்டிருக்கிறது. யாவரும் இதைப்படித்து பரதேவதையின் மஹிமையை தெரிந்து கொண்டு வழிபட உபயோகமாக இருக்கும் என்று ஆசீர்வதிக்கின்றோம்.

நாராயணஸ்ம்ருதி

கவிதாமணி திருச்சி-4

**அ.வெ.ர. கிருஷ்ணசாமி ரெட்டியார்** 12.12.80

## ஆசியுரை

கவிஞர் திரு. வள்ளிநாயகம் ஆதிசங்கரர் அருளிய ஸௌந்தர்யலஹரியை தமிழ்க் கவிதையாக பக்திச்சுவையோடு வழங்கி இருக்கிறார். கவிஞரின் உள்ளத்தில் அருள்சக்தியின் ஒளி தவழ்ந்து, சொல்லுக்குப் பொருளும், பொருளுக்கு விளக்கமும், வழங்கியிருக்கும் காட்சி கண்டு மகிழத்தக்கதாக இருக்கிறது.

அன்னையின் திருவருளை ஆதிசங்கரரைப் பின்பற்றி அவரது அடிச்சுவட்டிலே பின்பற்றுகின்ற கவிஞர் பரம்பரை வளரவேண்டுமென்ற ஆவல் வளர்ந்து வருவது கண்டு மகிழ்கிறேன். வாழ்க கவிஞர் வள்ளிநாயகம். அவரது பக்திசுவை நிறைந்த பனுவல் தொண்டு மேலும் வளர உளம்நிறைந்து நல்லாசி வழங்குகிறேன்.

இறைபணித் தொண்டன்

**அ.வெ.ர.கிருஷ்ணசாமி**

## பாராட்டுரை

ஆதிசங்கரர் அருளிச்செய்த சௌந்தர்ய லஹரியை வள்ளிநாயகம் மிக அருமையாக தமிழாக்கம் செய்திருக்கிறார். அதற்கு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியார் ஸ்வாமிகள் அருளாசி கொடுத்திருக்கிறார்கள். மிக தைரியமாக அம்பாள் அருளால் வடமொழிக் கவிதையை எழுதி அதற்குக் கீழ் தன் தமிழாக்கத்தை விளக்கியிருக் கிறார்கள். வடமொழி நன்கு அறிந்தவர்கள். அந்தத் தமிழாக்கத்தை உற்று கவனித்து அனுபவிக்க முடியும். வடமொழி தெரியாதவர்கள் துதியை அர்த்தம் புரிந்து நெகிழ்ந்து போகலாம். இம்மாதிரி பல்வேறு புத்தகங்கள் வரவேண்டும் என்று நான் விரும்புகின்றேன்.

ஓடும் தென்றலை தேராக மிதித்தேறி
உருமாறும் வசந்தத்தை அமைச்சாக்கி
வாடும் மலர்களை வில்லாக ஏந்தி
வண்டுகளை நாணாகப் பூட்டி
போடும் பாணமும் புஷ்பங்களாக
புவியையே வெல்கிறான் காமன்.
நாடும் உன்னருள் இல்லையேல் அனங்கன்
நானில மாள்வதுங் கூடுமோ?

என்று எளிமையான, இனிமையான தமிழில் விளக்குகிறார். வாங்கி, படித்துப் பார்த்து அனுபவிப்பது பண்புள்ளோர் கடமை.

எழுத்துச்சித்தர் **பாலகுமாரன்**

குமுதம் (பக்தி) ஸ்பெஷல் 1-15 ஜூலை -2013

கவியரசு **கண்ணதாசன்**
அரசவைக் கவிஞர்
தமிழ்நாடு

## வாழ்த்துப்பா

சங்கரர் அருளிச் செய்த
சௌந்தர்ய லஹரி தன்னை
பங்கமில் லாத வண்ணம்
பனித்தமி ழாக்கித் தந்தார்
மங்கலக் கவிதை வல்லார்
வள்ளிநா யகம்என் கின்றார்
அங்கயற் கண்ணி என்றும்
அருள்செய்து காப்பா ளாக!

தேவியின் அழகைப் பற்றி
சீர்பெற வடித்த பாடல்
கோவிலின் தீபம் போல
கொழுந்துவிட் டெரியக் கண்டேன்
காவிய நயத்தை நல்ல
கனித்தமிழ் மொழியில் தந்த
ஓவியக் கவிஞர் வாழ
உமையருள் புரிவா ளாக!

- **கண்ணதாசன்** -

**திருச்சி**
**2-10-80**

# பாராயண முறை

குறிப்பு : ஸ்தோத்ர பாராயணங்கள் 51 தினம் 108 முறை காலை மாலை இருவேளையும் செய்ய வேண்டும். அதுமட்டுமல்லாமல் நமது தசமஹா வித்யாவான காளி, தாரா, நீலா, சின்னமஸ்தா, பகளமுகி, தூமாவதி, ராஜமாதங்கி, கமலாத்மிகா தேவதைகளை தங்கம், வெள்ளி, தாமிரம் போன்ற யந்திரங்கள் கொண்டு பால், தேன் இவற்றால் அபிஷேகம் செய்து ஜபம் செய்தால் நல்ல பலன் கிடைக்கும். யந்திரங்களுக்கு வாசனை புஷ்பமான மல்லி, முல்லை, செண்பகம் கொண்டு பூஜை செய்திட வேண்டுகிறோம்.

யந்திரங்கள் நமது தசமஹாபீடத்தில் உபதேசத்துடன் கிடைக்கும்.வேண்டும் பக்தர்கள் நேரில் (மட்டும்) வந்து பெற்றுக்கொள்ளலாம்.

பௌர்ணமி தினத்தன்று நமது பீடத்தில் தசமஹா வித்யா ஹோமம் நடைபெறுகிறது. அதில் யந்திரங்கள் பூஜை செய்து கொடுக்கப்படும்.

இவற்றின் மூலம் பெறப்படும் வருமானம் மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகள், கை கால் ஊனமுற்றவர்கள் ஏழைகள் ஆகியோர்களை ஆஸ்ரமத்தில் வைத்து பராமரிக்க உதவுகிறது.

**சாக்த ஸ்ரீ சத்குரு சிவாச்சாரிய ஸ்வாமிகள்**

ஓம்

# ஸௌந்தர்ய லஹரி

(தமிழில்)

## காப்பு

பாதாதி கேசாதி பாதாந்த ஸௌந்தர்யம்
வேதாந்தி சங்கரன் வெள்ளமெனப் பாடினான்
மூதாதை கீர்த்திக்கு மாசின்றிப் பாவாக்க
வாதாபி விக்னேசன் காப்பு!

## ஸ்ரீ ஸௌந்தர்யலஹரீ

*சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும்*
*நசேதேவம் தேவோ நகலு குசல: ஸ்பந்திதுமபி*
*அதஸ்த்வாமாராத்யாம் ஹரி ஹர விரிஞ்சாதிபி ரபி*
*ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதமக்ருத புண்ய: ப்ரபவதி* 1

**சர்வமும் சக்தி**

சக்தியே உன்னோடு சேர்ந்ததால் தான்சிவனும்
சர்வமும் ஆக்குவான் திறன்பெற்றான்
சக்தியே நீயின்றி ஆக்கலும் காத்தலும்
அழித்தலும் அவனுக்குத் தான்கூடுமோ?
சக்தியே முன்னையின் புண்ணியம் இல்லையேல்
சத்பாதத் தூசியென் சிரம் சேருமோ?
சக்தியே உன்பாதம் பணியவும் அருள்வேண்டும்
சம்மதம் தருவாய யம்மா!

**பாராயண பலன் : தடைகள் அகலும்**

**தனீயாம்ஸம் பாம்ஸும் தவ சரண பங்கேருஹ-பவம்**
**விரிஞ்சி: சஞ்சின்வன் விரசயதி லோகானவிகலம்**
**வஹத்யேனம் செளரி: கதமபி ஸஹஸ்ரேண சிரஸாம்**
**ஹர: ஸம்க்ஷுத்யைனம் பஜதி பஸிதோத்தூலன விதிம்** 2

### திருவடி மகிமை

உன்பாதத் துகள்கொண்டு உலகம் படைத்தெல்லா
உயிர்களும் படைத்தானவ் வருட்பிரும்மன்
தன்சிரசில் மகாவிஷ்ணு தாங்கியதைக் காக்கின்றான்
தலையாயிரம் கொண்டவாதி சேஷனாக
வெண்ணீராய் உன்பாதத் தூசியைப் பூசியே
விளங்குவான் மகிழ்வோடு சிவநாயகன்
கண்ணாயிரங் கொண்ட சக்தியே உன்பாதக்
கமலத்தின் மகிமையான் சொல்லவோ?

**பாராயண பலன் : சுற்றத்தார், சமூக ஆதரவு கிட்டும்**

**அவித்யானாம் அந்தஸ்திமிர மிஹிர த்வீபநகரீ**
**ஜடானாம் சைதன்ய ஸ்தபக மகரந்த ஸ்ருதிஜரீ**
**தரித்ராணாம் சிந்தாமணி குணநிகா ஜன்மஜலதெள**
**நிமக்னானாம் தம்ஷ்ட்ரா முரரிபு வராஹஸ்ய பவதி** 3

### சிந்தாமணி

அம்பிகே அத்துகள் அருணன் உதயமாய்
அஞ்ஞான இருளகற்றும் தீவு
நம்பினோர் மூடராய் இருந்தாலும் நாடிவரும்
ஞானமெனும் அருள்வெள்ளத் தூது
ஏழைகள் துயரத்தை எழுபிறப்பு மகற்றுகின்ற
ஈடில்லா சிந்தாமணி யாகும்
நாளையைத் தொடர்கின்ற பிறவியும் நிறுத்துமாம்
வராகவ தாரத்தி னெயிறு!

**பாராயண பலன் : கலைகளில் தேர்ச்சி**

**த்வதன்ய: பாணிப்யாம் அபயவரதோ தைவதகண:**
**த்வமேகா நைவாஸி ப்ரகடித வராபீத்யபிநயா**
**பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்சா-ஸமதிகம்**
**சரண்யே லோகானாம் தவஹி சரணாவேவ நிபுணௌ** 4

**அபயம்**

அபயமென வந்தவர்க்கே அருள்கின்ற தேவர்கள்
ஆயிரம் பேரிங்கு கண்டேன்
அபிநயங் களில்லாமல் அழிபயங்க ளகற்றிவிட
ஆரம்மா உனைத்தவிர வுண்டு?
ஜபிக்கின்ற திருநாமம் நின்செவியைத் தொடுமுன்னே
சத்பாதம் பயம்யாவும் நீக்கிக்
குவித்திடுமே வரங்களொரு கோடானு கோடியென
கும்பிட்டேன் பக்தியினைத் தேக்கி!

**பாராயண பலன் : பயம் விலகும், நிலம் சொந்தமாகும்**

**ஹரிஸ்த்வாமாராத்ய ப்ரணத ஜன ஸௌபாக்யஜனனீம்**
**புரா நாரீ பூத்வா புரரிபுமபி க்ஷோபமனயத்**
**ஸ்மரோபி த்வாம் நத்வா ரதிநயனலேஹ்யேன வபுஷா**
**முனீநாமப்யந்த: ப்ரபவதிஹி மோஹாயமஹதாம்** 5

**நாம மகிமை**

உன்னை வணங்கினார் அடையாத துண்டோ
உன்நாமம் மகாசக்தி யன்றோ!
முன்னுன் புகழ்பாடி மோகினியாய் உருமாறி
சிவனையே கவர்ந்தானே விஷ்ணு?
பொன்னின் தாள்பணிந்து மன்மதனும் ரதிமனதை
தன்னழகால் கவர்ந்துயிணை சேர்ந்து
இன்னும் முனிவர்கள் செம்மனங் கலங்கிடவும்
எய்கின்றான் மலர்பாணங் கொண்டு!

**பாராயண பலன் : சந்தேகம் தீரும். வேறுபாடுகள் மறையும்**

**தனு: பௌஷ்டம் மௌர்வீ மதுகரமயீ பஞ்ச விசிகா:**
**வஸந்த: சாமந்தோ மலயமரு தாயோதநரத:**
**ததாப்யேக: சர்வம் ஹிமகிரிஸுதே காமபி க்ருபாம்**
**அபாங்காத்தே லப்த்வா ஜகதிதமனங்கோ விஜயதே** 6

**காமாட்சி**

ஓடும் தென்றலை தேராக மிதித்தேறி
உருமாறும் வசந்தத்தை அமைச்சாக்கி
வாடும் மலர்களை வில்லாக ஏந்தி
வண்டுகளை நாணாகப் பூட்டி
போடும் பாணமும் புஷ்பங் களாக
புவியையே வெல்கிறான் காமன்
நாடும் உன்னருள் இல்லையேல் அனங்கன்
நானில மாள்வதுங் கூடுமோ?

**பாராயண பலன் : இல்லறம் சிறக்கும்**

**க்வணத் காஞ்சீ தாமா கரிகலப கும்ப ஸ்தன நதா**
**பரிக்ஷீணா மத்யே பரிணத சரச்சந்த்ர வதனா**
**தனுர் பாணான் பாசம் ஸ்ருணி மபிததானா கரதலை:**
**புரஸ்தாதாஸ்தாம் நபுரமதிது: ஆஹோ புருஷிகா** 7

**ஒளிரும் சந்திரன்**

கரியதன் மத்தகம் போல்நகற் கனத்தினால்
சரிகின்ற சிற்றிடை சுற்றியே
சிறிதான அருமணிச் சிரிக்கின்ற மேகலை
சேர்வதால் அவ்விடை நாணிநிற்கும்
கரங்களில் வில்லொடு பாணமும் பாசமும்
கடிதினில் பாய்ந்திடும் ஈட்டிகொண்டு
இரவினில் சந்திரன் ஒளிர்கின்ற முகமென
எம்முன்னர் தோன்றுவாய் தாயே!

**பாராயண பலன் : பகைமை நீங்கும்**

**ஸுதா ஸிந்தோர்மத்யே ஸுரவிடபிவாடீ பரிவ்ருதே**
**மணித்வீபே நீபோபவனவதி சிந்தாமணி க்ருஹே**
**சிவாகாரே மஞ்சே பரமசிவ பர்யங்க நிலயாம்**
**பஜந்தி த்வாம் தன்யா: கதிசன சிதானந்த லஹரீம்** 8

**ஆனந்த மயம்**

அமுதக் கடலில் ரத்தினத் தீவில்
கற்பகக் கதம்பக் காவில்
அமைந்த சிந்தா மணியின் மனையில்
ஆனந்த சிவமயம் மீது
அமர்ந்த ஞான சக்தியின் வடிவே
அலைநகை யணிந்த அழகே
உமையே உன்னடி நெஞ்சில் இருத்துதல்
உத்தமர்க் கன்றோ வாய்க்கும்!

**பாராயண பலன் : சிறைவாசம், பந்தங்கள் நீங்கும்.**

**மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம்**
**ஸ்திதம் ஸ்வாதிஷ்டானே ஹ்ருதி மருத மாகாச முபரி**
**மனோபி ப்ரூமத்யே ஸகலமபி பித்வா குலபதம்**
**ஸஹஸ்ராரே பத்மே ஸஹரஹஸி பத்யா விஹரஸே** 9

**சிவசக்தி**

வெளியைக் காற்றின் அலைக்கரம் கவ்வி
வெடித்தலால் அக்கினி தோன்ற
துளித்த பூமியை சாகரம் சூழ
சுற்றும் கோள்களுக் கெல்லாம்
அளித்த தத்துவம் கடந்து மனதின்
ஆக்ஞா சக்கரம் பிளந்து
களிக்க சிவனுடன் அமர்ந்தாய் தேவி
கணக்கிலா இதழ்த்தா மரையில்!

**பாராயண பலன் : பிரிவு நீங்கும். சூழல் இதமாகும்**

**ஸுதாதாராஸாரை: சரணயுகளாந்தர் விகளிதை:**
**ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ புனரபி ரஸாம்னாய மஹஸ:**
**அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபம் அத்யுஷ்ட வலயம்**
**ஸ்வமாத்மானம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே குகரிணி** 10

### அமுதப் பிரவாகம்

ஆடி வெள்ளமாய் அடிகளில் பெருகும்
அமுதப் பிரவாக மோடி
நாடி நரம்பெலாம் நனைக்க உயர்ந்து
நிலவு மண்டலம் கடந்து
கூடு மாதாரச் சக்கர மடைந்து
குண்டலி சக்தி கவர்ந்து
நாடும் யோக நித்திரை யாழ்ந்து
நானில மாள்கிறாய் நீயே

**பாராயண பலன் : தூய்மை காக்க, கடமையாற்ற துணை நிற்கும்**

**சதுர்பி: ஸ்ரீகண்டை: சிவ யுவதிபி: பஞ்சபிரபி**
**ப்ரபின்னாபி: சம்போ: நவபிரபி மூலப்ரக்ருதிபி:**
**சதுச்சத்வாரிம்சத்வஸுதல கலாச்ர த்ரிவலய**
**த்ரிரேகாபி: ஸார்த்தம் தவ சரணகோணா: பரிணதா:** 11

### ஸ்ரீசக்ரம்

சிவனுக்கு ரூபமாய் நிற்பவை நான்கோடு
தேவிக்கு வட்டங்கள் ஐந்து
நவமான தாதுக்கள் நகில்ஸ்தான மெட்டோடு
நல்லபதி னாறு தளங்கள்
தவமாக முச்சுற்று மூன்றுவல மேகலை
மூலவாய்க் கோண மந்திரம்
இவையாவும் நாற்பத்து நான்கெண்ணத் தத்துவமாய்
இலங்குதே ஸ்ரீசக்ர மாக!

**பாராயண பலன் : நன்மக்கள் பேறு**

**த்வதீயம் ஸௌந்தர்யம் துஹினகிரிகன்யே துலயிதும்**
**கவீந்த்ரா: கல்பந்தே கதமபி விரிஞ்சி ப்ரப்ருதய:**
**யதாலோகௌத்ஸுக்யாத் அமரலலனா யாந்தி மனஸா**
**தபோபி: துஷ்ப்ராபாமபி கிரிஸ ஸாயுஜ்ய பதவீம்** 12

**தரிசனம்**

பனிமலையின் அரசனுக்கு அவதரித்த கன்னிகையே
படைப்போனும் அறியாத அழகே
இனிக்கின்ற உன்னழகை எப்படியும் தரிசிக்க
இயலவேண்டு மென்கின்ற ஆவலினால்
நனியழகு தேவமாதர் நாள்தோறும் நோன்பியற்றி
நாயகனாம் சிவனோடு கலந்து
தனியழகுக் காவியத்தைத் தன்னுள்ளம் காண்பதினால்
தபசிகளின் அமைதியினைப் பெற்றார்!

**பாராயண பலன் : திக்குவாய் நீங்கும், கவன சக்தி பெருகும்.**

**நரம் வர்ஷீயாம்ஸம் நயன விரஸம் நர்மஸு ஜடம்**
**தவாபாங்காலோகே பதிததம் அனுதாவந்தி சதச:**
**களத்வேணீபந்தா: குசகலச விஸ்ரஸ்த சிசயா**
**ஹடாத் த்ருட்யத் காஞ்ச்ய: விகளித துகூலா: யுவதய:** 13

**கடாட்ச மகிமை**

இருவிழியின் நோக்கதினால் மூவிழியோன் வென்றவளாம்
ஈஸ்வரியுன் பார்வையது பட்டால்
குறையுடைய மதியினனாய் குரூபியாய் அவனிருந்தும்
குலைகின்ற கேசத்தை மறந்து
சிறுகலச நகிலசைய தெறித்தமே கலைநழுவ
சிற்றிடை வெண்பட்டும் நெகிழ
மருவுமொரு ஆசையால் மயங்கியே அழகிய
மங்கையர் ஓடுவா ரன்றோ!

**பாராயண பலன் : காதல் மணம் கைகூடும்.**

க்ஷிதௌ ஷட்பஞ்சாசத் த்விஸமதிக பஞ்சாசதுததகே
ஹுதாசே த்வாஷஷ்டி: சதுரதிக பஞ்சாஸ தநிலே
திவித்விஷ் ஷட்த்ரிம்சத் மனஸி ச சது: ஷஷ்டிரிதி யே
மயூகா: தேஷாமப்யுபரி தவ பாதாம்புஜ யுகம் 14

### ஐம்பூத தத்துவம்

அண்டத்தின் மூலத்தில் ஐம்பத்து ஆறோடு
அப்புக்குள் ஐம்பத்து இரண்டும்
குண்டத்தின் அக்கினிக்குள் அறுபத்து இரண்டோடு
கொள்காற்றில் ஐம்பத்து நான்கும்
அண்டத்தின் வெளியினிலே எழுபத்து இரண்டோடு
அகத்துள்ளே அறுபத்து நான்கும்
உண்டான கிரணங்கள் அனைத்துக்கும் மேலேகி
வண்டானது கமலத்தில் அடிகள்!

**பாராயண பலன் : லஷ்மி கடாட்சம் கிடைக்கும்.**

ஸரஜ்ஜ்யோத்ஸ்னா சுத்தாம் ஸஸியுத ஜடாஜூடமகுடாம்
வர த்ராஸத்ராணஸ்ஃபடிக கடிகா புஸ்தக கராம்
ஸக்ருந்நத்வா நத்வா கதமிவ ஸதாம் ஸந்நிததே
மது க்ஷீர த்ராக்ஷா மதுரிமதுரீணா: ஃபணிதய: 15

### தேன்கவிதை

நிலாக்கால வெளுப்பாக நின்மேனி யொளிர
நிலவோடு மணிமுடியும் நுதல்சேர
கலாநாலும் ஜபமணியும் கருணையோடு அபயத்
தனிமுத்திரைத் தலம்தாங்கக் கரங்கள்
விழாக்கோல அழகினிலே வீற்றிருக்கு முந்தன்
வெண்தாமரைத் திருவடியை எண்ணித்
தொழாநிற்கும் நாவினிலே தோன்றுகின்ற கவிதை
தேன்கனிப்பால் தீஞ்சுவையை மிஞ்சும்!

**பாராயண பலன் : கவிதை கைவரும்**

**கவீந்த்ராணாம் சேத: கமலவந பாலாதபருசிம்**
**பஜந்தே யே சந்த: கதிசித் அருணா மேவ பவதீம்**
**விரிஞ்சி ப்ரரேயஸ்யா: தருணதர ஸ்ருங்கார-லஹரீ**
**கபீராபி: வாக்பி: விதததி ஸதாம் ரஞ்ஜந-மமீ** 16

**அருட்கடாட்சம்**

பாவேந்தர் மனக்கமலம் மலர்விக்கும் கதிரே
பனிமழையில் நனைந்த செம் மலரே
பூவேந்தித் தொழுதுந்தன் புன்னகையைக் கண்டார்
புகழ்வாணி அருட்கடாட்சம் பெற்று
நாவேந்தும் கவியெல்லாம் நல்லோர் அவைபுகழ
நனிமகிழ்வுத் தேன்விருந்து தருவார்
நீசேர்ந்த நன்நாவில் உருவாகும் பாடல்
நெஞ்சத்தை குளிர்விக்கு மம்மா!

**பாராயண பலன் : ஞானம் சித்திக்கும். கிலேசம் அகலும்.**

**ஸவித்ரீபிர் வாசாம் ஸஸிமணி சிலாபங்க ருசிபி:**
**வசின்யா த்யாபி: த்வாம் ஸஹ ஜனனி ஸஞ்சிந்தயதி ய:**
**ஸகர்த்தா காவ்யானாம் பவதி மஹதாம் பங்கிருசிபி:**
**வசோபி: வாக்தேவீ வதன கமலாமோத மதுரை:** 17

**சக்திச் சொற்கள்**

காந்தக் கல்லைப் பிளக்கப் பிறக்கும்,
காந்தி நிறத்தில் விளங்கும்
காந்த வசீனிச் சக்திகளோடு
நின்னையும் மனதில் வணங்க
சாந்திக் கமல மணத்தைச் சமைக்கும்
சக்திச் சொற்கள் தெறிக்கும்
ஈந்த காவியம் எதிர்வாக் கின்றி
ஏழுல கும்அரங் கேறும்!

**பாராயண பலன் : மகான்களின் ஆசிகிடைக்கும். நல்ல வரன் அமையும்**

**தனுச்சாயாபிஸ் தே தருண தரணி ஸ்ரீஸரணிபி:**
**திவம் ஸர்வாம் உர்வீம் அருணிம நிமக்னாம் ஸ்மரதி ய:**
**பவந்த்யஸ்ய த்ரஸ்யத்வன ஹரிண ஷாலீன நயனா:**
**ஸஹோர்வச்யா வச்யா: கதிகதி நகீர்வாண கணிகா:** 18

### வரம்

காலைக் கதிரோன் தெளிக்கும் ஒளிபோல்
கன்னியுன் உடலொளிர் செங்கதிர்
கோலம் உலகைக் கொள்ளும் அழகு
கோதை உந்தன் அருளென்று
நாளும் துதிக்கும் நல்லோன் கண்ணே
நாணும் மான்கண் ஊர்வசி
போலும் மாதர் சேர்வார் வசமாய்
பூவை உன் வரந் தானே!

**பாராயண பலன் : மாதர் ஆதரவு, கலைகளில் தேர்ச்சி.**

**முகம் பிந்தும் க்ருத்வா குசயுகம் அதஸ்தஸ்யததச:**
**ஹரார்தம் த்யாயேத்யோ ஹரமஹிஷிதே மன்மதகலாம்**
**ஸஸத்ய: சம் க்ஷோபம் நயதி வனிதா இத்யதிலகு**
**த்ரிலோகீ மப்யாசு ப்ரமயதி ரவீந்து ஸ்தனயுகாம்** 19

### மோகினி

முக்கண்ணன் நாடுகின்ற பார்வதியே உந்தன்
முகம்பிந்து ஸ்தானம்பின் தனங்கள்
சிக்கென்ற மின்னலிடை சிவசக்திக் குறியும்
சீரார் மன்மதக் கலையும்
எக்காறும் தியானிக்கும் அன்பர்க்கு முன்னால்
"திக்கெதிர்த்த சந்திரனும் சூரியனும்
பக்கநகில் அமைப்பான மூவுலகச் சக்திப் "
பாவையர்கள் மோகித்து நிற்பார்!

**பாராயண பலன் : அரசுவழி ஆதாயம். மாதர் ஆதரவு.**

**கிரந்தீ மங்கேப்ய: கிரண நிகுரும்பாம்ருத ரஸம்**
**ஹ்ருதித்வாமாதத்தே ஹிமகர சிலாமூர்த்தி மிவய:**
**ஸஸர்ப்பாணாம் தர்ப்பம் சமயதி சகுந்தாதிப இவ**
**ஜ்வரப்லுஷ்டான் த்ருஷ்ட்யா ஸுகயதி ஸுதாதாரஸிரயா** 20

### தவப்பயன்

சுவைமிக்க அமுதத்தேன் வியர்க்கின்ற மேனிக்குச்
சுடர்விடும் சந்திரகாந்தச் சிலையை
உவமிக்கத் தோன்றுதம்மா உத்தமியே, உன்னை
உள்ளத்தில் நிலைநிறுத்தித் தியானிப்போன்
கவனத்தில் கருடன்போல் கூர்மையனாய் நச்சரவுக்
கடும் விஷத்தைத் தீர்க்கின்ற பலம் பெற்று
தவப்பயனாம் பார்வையினால் நோய்தீர்த்து வாழ்விப்பான்
தாயேநின் தியானப்பல னன்றோ!

**பாராயண பலன் : தோஷம் நீங்கும். விஷம் இறங்கும்**

**தடில்லேகா தன்வீம் தபன ஸஸி வைச்வாநரமயீம்**
**நிஷண்ணாம் ஷண்ணா மப்புரி கமலானாம் தவகலாம்**
**மஹாபத்மாடவ்யாம் ம்ருதித மலமாயேந மனஸா**
**மஹாந்த: பஷ்யந்த: தததி பரமாஹ்லாததலஹரீம்** 21

### பேரானந்தம்

ஆறாம் கமலம் அதற்கு மப்பால்
ஆயிரத் தெட்டிதழ் மலரில்
ஆறா அக்கினி சந்திரன் சூரியன்
ஆன மூவொளி போல
ஓரா யிரம்வழித் தெறிக்கும் மின்கொடி
உன்கலை தன்னைக் காமம்
தீரா மாயை அகற்றிய நெஞ்சில்
தீட்டுதல் பேரானந்தம்!

**பாராயண பலன் : அபவாதம் நீங்கும். தைரியம் பிறக்கும்**

**பவானி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணாம்**
**இதி ஸ்தோதும் வாஞ்சன் கதயதி பவானி த்வமிதிய:**
**ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜ சாயுஜ்ய பதவீம்**
**முகுந்த ப்ரஹ்மேந்த்ர ஸ்புட-மகுட நீராஜித பதாம்** 22

**பவானி**

வீரத்தின் பவானியே உனையெண்ணித் துதித்து
பவானிநீ எனத்தொடங்கு முன்பே
ஈரத்தின் விழியோரம் அருள்புரிவாய்; பிரம்மனும்
விஷ்ணுவும் இந்திரனும் கிரீடத்தால்
ஆரத்தி செய்தவுன் அருட்பாதக் கமலத்து
சாயுஜ்யம் அளிக்கின்றாய் தேவீ!
நேரத்தில் பக்தர்களைக் காக்கின்ற உனைப்போல
நேசிக்கு முறவொன்று உண்டோ?

**பாராயண பலன் : வழக்குகளில் வெற்றி.**

**த்வயா ஹ்ருத்வா வாமம் வபுரபரித்ருப்தேந மனஸா**
**சரீரார்த்தம் சம்போ: அபரமபி சங்கே ஹ்ருதமபூத்**
**யதேதத் த்வத்ரூபம் ஸகல மருணாபம் த்ரிநயனம்**
**குசாப்யாமாநம்ரம் குடில ஸஸி சூடால மகுடம்** 23

**பேரொளி**

உருவமது சிவப்பாக உதித்தகண் மூன்றாக
உள்ளடங்கிய நகிலிரண்டும் நாண
பிறைதரித்த நுதலோடு என்மனதில் விளங்குகிற
பேரொளியே பார்வதியே தாயே
பரமசிவன் உடலிலொரு பாதியை அடைந்தும்நீ
பரிவடங்க மாட்டாது தானோ
திருவுருவம் முழுவதுமே ஆட்கொண்டு பிரிவின்றி
சிவத்தோடு ஐக்கியமு மானாய்!

**பாராயண பலன் : கடன், ஆபத்து நீங்கும்**

**ஜகத்ஸூதே தாதா ஹரி ரவதி ருத்ர: க்ஷபயதே**
**திரஸ்குர்வன் நேதத் ஸ்வமபி வபுரீச ஸ்திரயதி**
**ஸதா பூர்வ: ஸர்வம் ததிதம் அனுக்ருஹ்ணாதி சசிவ:**
**தவாஜ்ஞாம் ஆலம்ப்ய க்ஷணசலிதயோ: ப்ரூலதிகயோ:** 24

**நான்காம் தத்துவம்**

ஆக்கும் பிரம்மனும் காக்கும் விஷ்ணுவும்
அழிக்கின்ற ருத்திரனும் மறையத்
தேக்கித் தன்னுருவில் தானும் மறைகின்ற
ஈஸ்வரன் உன்விழியின் மேலே
தூக்கும் கொடிப்புருவம் அசைகின்ற ஆக்ஞையினால்
துலங்கும் முத்தொழிலும் செய்து
பார்க்க நான்காம் தத்துவமாய் இருக்கின்றான்
பார்வையின் சிறப்புதா னம்மா!

**பாராயண பலன் : சாபவிமோசனம் பெறலாம். வாயுத் தொல்லை நீங்கும்.**

**த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுண ஜநிதாணாம் தவ சிவே**
**பவேத் பூஜா பூஜா தவ சரணயோர் யா விரசிதா**
**ததா ஹி த்வத் பாதோத்வஹன மணிபீடஸ்ய நிகடே**
**ஸ்திதா ஹ்யேதே சச்வந் முகுலித கரோத்தம்ஸ மகுடா:** 25

**சக்தி சாகரம்**

முக்குணங்கள் தோற்றுவித்த மும்மூர்த்தித் தேவர்தம்
முடிமீது இருகரமும் கூப்பி
திக்கெட்டும் பூஜிக்கும் திருவடியின் பீடத்தில்
சிரம்தாழ்த்தி நிற்கின்ற தாலே
முக்திக்கு வழிதேடி நின்பாதம் தொழும்பூஜை
மும்மூர்த்தி வழிபாடு மாகும்
சக்திநீ சாகரம், சரணங்கள் கலங்கரை
சாத்தியம் எனது மீட்சி!

**பாராயண பலன் : பதவி, அதிகாரம் பெறலாம்.**

**விரிஞ்சி: பஞ்சத்வம் வ்ரஜதி ஹரிராப்நோதி விரதிம்**
**விநாஸம் கீனாசோ பஜதி தனதோ யாதி நிதனம்**
**விதந்த்ரீ மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலிதத்ருசா’**
**மஹா ஸம்ஹாரேஸ்மின் விஹரதி சதி த்வத்பதி ரஸெள** 26

**ஊழி**

மாலும் பிரம்மனும் யமனோடு இந்திரரும்
மாவண்ட சரா சரங்களும்
வீழும் ஊழியில் விளங்கும் சதாசிவன்
வீழாத காரணம் உன்னை
ஆளும் தலைவன் அவனென்ற தால்தானே
அம்மையுன் பத்தினித் தன்மை
ஊழியைத் தாண்டி உருவாகு முலகிலும்
உயர்ந்ததாய் வணங்கப்படு மம்மா!

**பாராயண பலன் : எதிரிகள் அடங்குவர்**

**ஜபோ ஜல்ப: சில்பம் சகலமபி முத்ரா விரசநா**
**கதி: ப்ராதக்ஷிண்யக்ரமணம் அசநாத்யாஹுதிவிதி:**
**ப்ரணாம: ஸம்வேச’: ஸுகமகிலம் ஆத்மார்ப்பண த்ருசா’**
**ஸபர்யாபர்யாயஸ்தவ பவது யந்மே விலஸிதம்** 27

**அர்ப்பணம்**

உனக்கே அர்ப்பணம் என்றெண்ணி நான்பேசும்
பேச்செல்லாம் மந்திரங்க ளாக
உனக்கே அர்ப்பணம் என்றெண்ணி அசைகின்ற
உடலசைவு முத்திரையு மாக
உனக்கே அர்ப்பணம் என்றெண்ணி நடக்கின்ற
நடையாவும் உனைச்சுற்றிய தாக
உனக்கே என்றுண்ணல் வேள்வியாய், ஓய்வெடுத்தல்
வணக்கமாய் ஏற்றுக்கொள் தேவீ!

**பாராயண பலன் : மந்திர சித்தி பெறலாம்**

**ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபயஜரா ம்ருத்யு ஹரிணீம்**
**விபத்யந்தே விஷ்வே விதிசதமகாத்யா திவிஷத:**
**கராலம் யத்க்ஷ்வேலம் கபலிதவத: காலகலநா**
**நசம்போ: தந்மூலம் தவ ஜநநி தாடங்கமகிமா** 28

### தாடங்க மகிமை

பாயிடும் பிணியையும் மூப்பையும் கடக்க
பருகினார் அமுதந் தேவர்
ஆயினும் அழிவர் அந்தமாம் ஊழியில்
அழியான் விஷமுண்ட கண்டன்
தூயோன் தரிக்கக் காரணம் உந்தன்
துலங்கும் கற்பின் வலிமையும்
தாயுன் காதணித் தாடங்க மகிமையும்
தானே வேறென்ன சொல்வேன்!

**பாராயண பலன் : மரண பயம் விலகும்.**

**கிரீடம் வைரிஞ்சம் பரிஹர புர: கைடபபித:**
**கடோரே கோடீரே ஸ்கலஸி ஜஹிஜம்பாரி மகுடம்**
**ப்ரணம்ரேஷ்வேதேஷு ப்ரஸப முபயா தஸ்ய பவனம்**
**பவஸ்யாப்யுயத்தானே தவ பரிஜனோக்தி: விஜயதே** 29

### மஞ்சள் மகிமை

இந்திரன் விஷ்ணு பிரம்மன் முதலோர்
இணையடித் தாழ வருங்கால்
சுந்திரக் கிரீடம் திருவடி யதனில்
தொட்டா தொதுக்க முனைய
சந்திரப் பிறையை சூடியோன் வருகை
சாற்றிய ஒலியினைக் கேட்டு
மந்திர மோகினி வந்துநீ அழைப்பாய்
மஞ்சளின் மகிமை தானம்மா!

**பாராயண பலன் : சுகப்பிரசவமாகும், விலங்குகள் வசப்படும்.**

**ஸ்வதேஹோத்பூதாபி: க்ருணிபி: அணிமாத்யாபி: அபித:**
**நிஷேவ்யே நித்யே த்வா மகமிதி சதா பாவயதி ய:**
**கிமாச்சர்யம் தஸ்ய த்ரிநயன ஸம்ருத்திம் த்ருணயதோ**
**மஹாஸம்வர்தாக்னி: விரசயதி நீராஜன விதிம்** 30

**நித்ய தெய்வம்**

நித்திய தெய்வம்உன் திருவடியில் தோன்றும்
சித்தி அணிமஹிமா ஐஸ்வர்யம்
சத்திய வாக்கால் சாற்றித் தொழுது
தன்னாத்மா நீயென்று எண்ணி
பித்தனின் செல்வாக்கைத் துரும்பென ஒதுக்கிப்
பூஜிக்கும் அடியோரை பிரளயத்தின்
மொத்த ஊழித்தீ மங்களமாய் வலம்வந்து
சேவிக்கும் வியப்பில்லை யம்மா!

**பாராயண பலன் : அசாதாரண செயல்களில் வெற்றி.**

**சது: ஷஷ்ட்யா தந்த்ரை: சகலமதிஸந்தாய புவனம்**
**ஸ்திதஸ் தத்தத் ஸித்தி ப்ரஸவ பரதந்த்ரை: பசுபதி:**
**புன: த்வந்நிர்ப்பந்தா தகில புருஷார்த்தைக கடனா**
**ஸ்வதந்த்ரம் தே தந்த்ரம் க்ஷிதிதலம் அவாதீதரதிதம்** 31

**வீடுபேறு**

நாடும் அறுபத்து நான்கு தந்திரம்
நாயகன் படைத்து அமர
தேடும் நின்னருள் கிடைக்கா ததினால்
தேவரும் பக்தரும் உழல
ஓடிச் சிவனைக் கேட்கநீ இணங்கி
உந்தன் தந்திர முடைக்க
வீடும் பிறவும் அடையவே நின்னை
வேண்டினோர் தன்னிலை கண்டார்!

**பாராயண பலன் : வசீகரிக்கும் ஆற்றல் உண்டாகும்.**

**சிவ: சக்தி: காம: க்ஷித ரத ரவி: சீத கிரண:**
**ஸ்மரோ ஹம்ஸச்சக்ர: ததனு சபரா மாரஹரய:**
**அமீ ஹ்ருல்லேகாபி: திஸ்ருபி: அவஸானேஷுகடிதா**
**பஜந்தே வர்ணாஸ்தே தவ ஜனனி நாமாவயவதாம்** 32

## மாமந்திரம்

திரிபுர சுந்தரி திருப்பெயர் மந்திரம்
        ஸ்ரீமத் பஞ்சதசா க்ஷரியாகும்
திரிபுர மெரித்தோன் தீயினில் வெந்தோன்
        தீவினை அழிக்கும் சக்தி
நெறிபடு மூன்று ஹ்ரீம்கா ரங்கள்
        நிலைத்த பதினைத் தெழுத்தும்
அறிபடு மந்திரம் மாபுரம் மூன்றிலும்
        அழகியுன் நாமந் தானே!

**பாராயண பலன் : ஆயுள் தீர்க்கம், வணிகத்தில் வெற்றி.**

**ஸ்மரம் யோனிம் வக்ஷ்மீம் த்ரிதய மிதமாதௌ தவமனோ:**
**நிதாயைகே நித்யே நிரவதி மஹாபோக ரசிகா:**
**பஜந்தி த்வாம் சிந்தாமணி குணநிபத்தாக்ஷ வலயா:**
**சிவாக்நௌ ஜுஹ்வந்த: ஸுரபிக்ருத தாராஹுதி சதை:** 33

## வேள்வி

நல்வினை யுடைய யோகிகள் கையில்
        தாமரை மாலை தரித்து
வல்வினை யொழித்து வளர்சுகம் நாடி
        அன்னையுன் நிறைவினைக் காண
இல்வாய், காம லக்ஷ்மியின் பீஜமாம்
        க்ரீம்ஹ்ரீம் ஸ்ரீம்பீஜம் சேர்த்து
நல்நெய் யூற்றி ஸௌபாக்ய பஞ்சதசி
        என்றே வேள்விக ளியற்றுவர்!

**பாராயண பலன் : பொருள் சேர்க்கை.**

**சரீரம் த்வம் சம்போ: ஸஸி மிஹிர வக்ஷோருஹ யுகம்**
**தவாத்மானம் மன்யே பகவதி நவாத்மான மநகம்**
**அத: ஷேஷ: சே’ஷீத்யயம் உபய ஸாதாரணதயா**
**ஸ்தித: ஸம்பந்தோ வாம் ஸமரஸ பராநந்த பரயோ:** 34

**பரமானந்தம்**

ஜீவனவன், குடியிருக்கும் தேகம்நீ, நவமான
வியூகத்தின் ரூபமவன் ஜோதி நீ
பாவனையில் நாயக நாயகியாய் சேர்ந்திருத்தல்
பரமனுக்கும் தேவிக்கும் இயல்பேதான்!
மூவிழியோன் உனதுருவை தன்னுணர்வால் தரிசிக்க
முந்திநீ அவனுக்குள் சங்கமிப்பாய்!
தேவனுடன் தேவீநீ சமமாகத் தோன்றியென்றும்
சேரும்பர மானந்தமாய் நின்றாய்!

**பாராயண பலன் : நோய் தீரும், குழப்பம் நீங்கும்.**

**மநஸ்த்வம் வ்யோமத்வம் மருதஸி மருத் ஸாரதி ரஸி**
**த்வ மாப: த்வம் பூமி: த்வயி பரிணதாயாம் நஹி பரம்**
**த்வமேவ ஸ்வாத்மாநம் பரிணமயிதும் விச்வ வபுஷா**
**சிதாநந்தாகாரம் சிவயுவதி பாவேந பிப்ருஷே** 35

**பைரவன் துணை**

வெளியும்நீ வெளியை நிறைத்த வாயும்நீ
வீறுடன் எழுமத் தீயும்நீ
துளியாய்ப் பிறந்து கடலாய் விரியும்
நீரும்நீ சார்ந்த பூமியும்நீ
ஒளிசே ரகிலம் உள்ள பொருளெலாம்
உடைத்தாய்நீ உலகுருக் கொண்டு
அளிசேர் பைரவன் துணையாய்த் தரித்து
ஆயிரம் தத்துவ மானாய்!

**பாராயண பலன் : சுவாசநோய் தீரும்.**

**தவாஜ்ஞா சக்ரஸ்தம் தபந ஸஸி கோடி த்யுதி தரம்**
**பரம் சம்பும் வந்தே பரிமிளித பார்ச்வம் பரசிதா**
**யமாராத்யந் பக்த்யா ரவி ஸஸி சுசீநாம் அவிஷயே**
**நிராலோகேலோகே நிவஸதி ஹி பாலோக புவநே** 36

**தியான பலன்**

நின்புருவ மத்தியின் ஆக்ஞா சக்கரத்தே
நிகரில்லா சூர்யசந்திர ஒளியாகி
இன்புறவே சகுணமும் நிர்க்குணமும் இடப்புறத்தே
ஏந்திநிற்கும் காமேசன் தன்னை
அன்புருவாய் அகத்திலெண்ணி த்யானிக்க முத்தீயின்
அளவுக்கப் பாற்பட்டு உயர்ந்ததான
நின்திருவின் சாயுஜ்ய பதவியினைப் பெற்று
நீடிப்பான் நின்னருளே யம்மா!

**பாராயண பலன் : தீயபழக்கங்கள், கூடாநட்பு விலகும்.**

**விசுத்தௌ தே சுத்தஸ்படிக விசதம் வ்யோம ஜநகம்**
**சிவம் ஸேவே தேவீமபி சிவஸமாந வ்யவஸிதாம்**
**யயோ: காந்த்யா யாந்த்யா: ஸஸிகிரண ஸாரூப்யஸரணே:**
**விதூதாந்தர் த்வாந்தா விலஸதி ஸகோரீவ ஜகதீ** 37

**ஜோதி**

இருளலக இணைகின்ற சகோரங்கள் போல
இவ்வுலகம் ஆனந்த மாக
திருவருளாம் திங்களொளி அஞ்ஞான மகற்றி
சிவதேவி ஜோதியிலே ஆடும்
மருளில்லா விசுத்தியெனும் சக்கரத்தே ஒளிர்ந்து
மாவெளியின் தத்துவமு மானான்!
அருளருளும் இணைந்தாற்போல அம்மைநீ அத்தகைய
அன்பனுடன் கலந்தாய்நான் வணங்குகிறேன்!

**பாராயண பலன் : ஆரோக்கியம் அமையும்.**

**ஸமுந்மீலத் ஸம்வித்கமல-மகரந்தைக-ரஸிகம்**
**பஜே ஹம்ஸத்வந்த்வம் கிமபி மஹதாம் மானஸசரம்**
**யதாலாபாத் அஷ்டாதச குணித வித்யாபரிணதி:**
**யதாதத்தே தோஷாத் குண மகிலம் அத்ப்ய: பய இவ** 38

### ஞானத்தேன்

ஞானத் தாமரைத் தேனைப் பருகும்
ஞானிகள் மனத்தே நீந்தும்
கானம் நிகர்க்குந் தொனியி லிருந்து
பதினெண் கலைகளுந் தோன்றும்
ஊனம் பிரித்து உயர்வினை நல்கும்
உத்தம அன்னங்க ளாக
மோனத் திருக்கும் சிவனையும் நின்னையும்
த்யானிப் போர்க்கருள் வாயே!

**பாராயண பலன் : குழந்தைகள் நோய் தீரும்.**

**தவ ஸ்வாதிஷ்டானே ஹுதவஹம் அதிஷ்டாய நிரதம்**
**தமீடே ஸம்வர்த்தம் ஜனனி மஹதீம் தாம் சசமயாம்**
**யதாலோகே லோகான் தஹதி மஹஸி க்ரோத கலிதே**
**தயார்த்ரா யா த்ருஷ்டி: ஸிஸிரம் உபசாரம் ரசயதி** 39

### ஜபம்

அக்கினித் தத்துவ ஸ்வாதிஷ் டானத்தே
ஆடும் ருத்திரன் தன்னையும்
சற்குண சீலியுன் 'ஸமயா' குணம் நாடி
ஜபிக்கின்றேன் வாழ்விப்பாய் தாயே
முக்கண்ணன் சினநோக்கில் மூவுலகும் கனல்பற்றி
முப்புரமாய் உலகாகு முன்பே
திக்கெட்டும் திருப்பார்வை தேவியுன் குளிர்பார்வைத்
தீர்க்கத்தில் உயிர்தழைக்கு மம்மா!

**பாராயண பலன் : திருஷ்டி தோஷம் விலகும்**

**தடித்வந்தம் சக்த்யா திமிரபரிபந்தி ஸ்புரணயா**
**ஸ்புரந் நாநாரத்னாபரண பரிணத் தேந்த்ர தனுஷட**
**தவ ச்யாமம் மேகம் கமபி மணிபூரைக சரணம்**
**நிஷேவே வர்ஷந்தம் ஹரமிஹிர தப்தம் த்ரிபுவனம்** 40

### சதாசிவம்

நீலமேகம் மணிபூரகச் சக்கரத்தில் சேர
இருளகற்றும் மின்னல்களும் கூட
கோலவண்ண ரத்தினங்கள் ஜோதிவில்லாய்த் தோன்ற
கோதைநீ சதாசிவமாய் மாறி
ஆலகால விஷத்தை யுண்ட நீலகண்டன்
அக்கினியால் உலகைச்சுடும் போது
காலமழை அமுதமாகிக் குளிர்விக்கும் தாயே
காலமெல்லாம் வணங்கிடுவே னுன்னை!

**பாராயண பலன் : எதிர்காலம் சீராகும்.**

**தவாதாரே மூலே சஹஸமயயா லாஸ்யபரயா**
**நவாத்மானம் மந்யே நவரஸ மஹாதாண்டவநடம்**
**உபாப்யாம் ஏதாப்யாம் உதயவிதிம் உத்திச்ய தயயா**
**சநாதாப்யாம் ஸஜ்ஞே ஜநகஜநநீமத் ஜகதிதம்** 41

### அம்மையப்பன்

ஆதார மூலத்தின் சக்கரத்தே 'ஸமயா'
ஆடுகின்ற நவரஸத்தி னோடு
பாதார விந்தத்தின் பைரவத் தாண்டவம்
பார்த்துநான் கைகூப்பி னேன்
சேதார ஊழிக்குப் பின்னாலே உருவாகும்
ஜெகத்தில்வாழ் உயிர்களுக்குங் கூட
நீதானே யம்மை! சிவன்தானே தந்தை!
நின்னருளே அவ்வுலகும் ஆளும்!

**பாராயண பலன் : வயிற்றுநோய் தீரும்**

**கதைர்மாணிக்யத்வம் ககநமணிபி: ஸாந்த்ரகடிதம்**
**கிரீடம் தே ஹைமம் ஹிமகிரிஸுதே கீர்த்தயதி ய:**
**ஸ நீடே யச்சாயாச்சுரணசபலம் சந்த்ரசகலம்**
**தநு: ஸௌநாஸீரம் கிமிதி ந நிபத்நாதி திஷணாம்** **42**

**வானவில்**

பன்னிரண்டு கதிர்களுந்தான் தவமிருந்து கிரீடத்தின்
ரத்தினங்களில் பளபளப்பாய் மின்ன
வண்ணக்குடை சார்த்தியதாய் இருப்பதான முடிவளைவில்
வானவில்லாய் நவரத்னம் ஒளிசிந்த
உன்னைக்கவி எழுதவந்தோன் சந்திரகலை எட்டித்தான்
உருமாறி எழிற்கோலம் காட்டுதென்று
எண்ணத்திலே பிரமித்து எழுகின்ற உவமைகளில்
எதையெழுத என்றுவுனைக் கேட்பான்!

**பாராயண பலன் : கௌரவம் உயரும்.**

**துநோது த்வாந்தம் நஸ்துலிததலி தேந்தீவரவநம்**
**கந ஸ்நிக்தச்லக்ஷ்ணம் சிகுர நிகுரும்பம் தவ சிவே**
**யதீயம் ஸௌரப்யம் ஸஹஜம் உபலப்தும் ஸுமநஸோ**
**வஸந்த்யஸ்மிந் மந்யே வலமதநவாடீவிடபிநாம்** **43**

**மலர்க்காடு**

கருநெய்தல் பூமலர்ந்த மலர்க்காடு உன்கூந்தல்
கரியஇருள் அஞ்ஞான மகற்றும்
திருவெய்த பக்தர்க்குத் திசைகாட்டும் உன்கேசம்
தெவிட்டாத ஆனந்த மூட்டும்
அருள்கூந்த லதன்வாசம் துய்த்திடவே வானுலகின்
சுடர்ப்பூக்கள் கற்பகத்தில் பூக்குமுன்பு
நறுமணத்துப் பூங்குழலில் நாடிவந்து சேர்ந்திருக்கும்
நாயகீயந் நெய்க்கேசம் போற்றி!

**பாராயண பலன் : மகிழ்ச்சி நிலைக்கும்**

**தனோது க்ஷேமம் நஸ்தவ வதன ஸௌந்தர்யலஹரீ**
**பரீவாஹ: ஸ்ரோத: ஸரணிரிவ சீமந்தஸரணி:**
**வஹந்தீ சிந்தூரம் ப்ரபல கபரீ பார திமிர**
**த்விஷாம் ப்ருந்தை: பந்தீக்ருதமிவ நவீனார்க்ககிரணம்** 44

**சீர்வகிடு**

அழகுமுக அழகெல்லாம் வழிந்தோடு மோடை
அம்பிகேயுன் கூந்தலிடை வகிடு
திலகநுதல் மேலேறிக் கருங்கூந்தல் இருட்டறையில்
திகழ்கின்ற இளங்கதிரின் கோடு
வழங்குகிறச் செந்தூரம் வழிகின்ற திருநெற்றி
வான்சூரிய ஒளியாக மாறி
இலங்குகிறச் சீர்வகிடு எல்லாவித நலந்தந்து
எங்களைக் காக்கட்டு மம்மா!

**பாராயண பலன் : சர்வஜன ஆதரவு கிட்டும்**

**அராலை: ஸ்வாபாவ்யாத் அலிகலபஸஸ்ரீபி: அலகை:**
**பரீதம் தே வக்த்ரம் பரிஹஸதி பங்கேருஹருசிம்**
**தரஸ்மேரே யஸ்மிந் தசநருசி கிஞ்ஜல்கருசிரே**
**ஸுகந்தௌ மாத்யந்திஸ்மர தஹநசக்ஷு: மதுலிஹ:** 45

**திருமுகம்**

புன்னகை விரிய பூத்த தாமரைப்
பூமுகம், கேசரப் பற்கள்
நன்மணம் கமல நறுமண மாக
நாடும் ஈஸ்வரக் கண்கள்
உன்முகஞ் சுற்றும் வண்டென வாடும்
உன்னுதல் பரவிய கேசம்
சின்னவைத் தேனீ மொய்ப்பது போல
திருமுகம் கமலம் பழிக்கும்!

**பாராயண பலன் : எதிர்காலம் உணரலாம்.**

**லலாடம் லாவண்யத்யுதிவிமலம் ஆபாதி தவ யத்**
**த்விதீயம் தந்மந்யே மகுடகடிதம் சந்த்ரச'கலம்**
**விபர்யாஸந்யாஸாத் உபயமபி ஸம்பூய ச மித:**
**ஸுதாலேபஸ்யூதி: பரிணமதி ராகாஹிமகர:** 46

**பௌர்ணமி**

கவிழ்ந்த பிறைபோல் கவின்முடி அடியில்
காணும் ஒளிநுத லதையும்
குவிந்த இளம்பிறைக் கிரீடத் திருக்கும்
குறையுடைச் சந்திரன் தனையும்
நிமிர்த்தி இணைக்கப் பௌர்ணமி முழுமதி
என்முன் தவழுவ தாகும்
அமர்த்தி நெஞ்சில் அதனை வழுத்த
அகத்தின் லட்சியம் காணும்!

**பாராயண பலன் : லட்சியம் ஈடேறும்.**

**ப்ருவௌ புக்நே கிஞ்சித் புவநபயபங்கவ்யஸநிநி**
**த்வதீயே நேத்ராப்யாம் மதுகரருசிப்யாம் த்ருதகுணம்**
**தனுர்மந்யே ஸவ்யேதரகர க்ருஹீதம் ரதிபதே:**
**ப்ரகோஷ்டே முஷ்டௌ ச ஸ்தகயதி நிகூடாந்தரமுமே** 47

**ஒளிவில்**

இடக்கரத்தில் மதன்தாங்கிய வில்லுந்தன் புருவம்
இருவிழியின் வண்டானது நாண்
குடைநாசி புருவமத்தி குறுக்கிடவே வில்லின்
கடைப்பாதி காண்கின்றேன் தாயே!
கடனாக உலகோரின் அச்சத்தைப் போக்கக்
காத்திருக்கும் அம்பிகே பவானி!
உடனுடனே துயரங்கள் தீர்க்கவே விழிமீது
ஒளிவில்லை ஏந்தினாய் போலும்!

**பாராயண பலன் : தேவதைகளின் அருள் பெறலாம்.**

**அஹ: ஸூதே ஸவ்யம் தவ நயநம் அர்க்காத்மகதயா**
**த்ரியாமாம் வாமம் தே ஸ்ருஜதி ரஜநீநாயகதயா**
**த்ருதீயா தே த்ருஷ்டி: தரதலித ஹேமாம்புஜருசி:**
**ஸமாதத்தே சந்த்யாம் திவஸநிசயோ: அந்தரசரீம்** 48

**விழித்தாமரை**

வலதுவிழி கதிரவனின் வடிவெனவே தோன்றி
வளரும்பகல் பொழுதினையே படைக்கும்
உலகினிலே இரவுதனை உருவகிக்க எண்ணி
இடதுவிழி சந்திரனைக் காட்டும்
குலவுகிற அந்திசந்திச் செம்மையினைக் கூட்ட
கோலநுதல் விழித்தாமரை யருளும்!
நிலவுகிற காலங்கள் நின்பார்வை யாலே
மாறிவரும் தன்மையினைப் பேணும்!

**பாராயண பலன் : புலனடக்கம், புற ஆளுமை பெறலாம்.**

**விசாலா கல்யாணீ ஸ்புடருசி: அயோத்யா குவலயை:**
**க்ருபாதாரா தாரா கிமபி மதுராபோகவதிகா**
**அவந்தீ த்ருஷ்டிஸ்தே பகுநகர விஸ்தாரவிஜயா**
**த்ருவம் தத்தந்நாம வ்யவஹரண யோக்யா விஜயதே** 49

**சுடர் விளக்கு**

மங்களமாய் விசாலமாய் ஒளிமிகுந்த சுடர்விளக்காய்
மலர்க்குவளை தோற்கின்ற தன்மையதாய்
பொங்குகின்ற கருணைக்கும் புதுஊற்றாய் மதுரமாய்
பொலிகின்ற அழகுடனே விளங்கி
எண்நகராம் விசால கல்யாணி அயோத்யா
எழில்தாரா போகவதி யவந்திமதுரா
நற்குணமும் கொண்டிலங்கும் நறுந்தேனின் பார்வையினை
நானெப்படி வருணிப்பே னம்மா!

**பாராயண பலன் : இழந்தசெல்வம் மீண்டு வரும்.**

**கவீநாம் ஸந்தர்பஸ்தபக-மகரந்தைக-ரஸிகம்**
**கடாக்ஷ வ்யாக்ஷேப-ப்ரமர-கலபௌ கர்ணயுகலம்**
**அமுஞ்சந்தௌ த்ருஷ்ட்வா தவ நவரஸாஸ்வாத தரலௌ**
**அஸூயா ஸம்ஸர்காத் அலிகநயனம் கிஞ்சிதருணம்** 50

**கவிதைப்பூ**

கவிதைப்பூ பொருள்தேனை கவர்ந்திடவே இருவண்டுக்
கருவிழிகள் காதுகளில் மொய்க்கும்
நவரஸத்தை உறிஞ்சிடவே நகராது ஆங்கமர்ந்த
சிறுவண்டு விழியுருளக் கண்டு
தவநெற்றித் தனிவிழியும் தடுமாறி ஆசையினால்
தகதகத்துச் செந்நிறமாய் மாறும்
புவனேஸ்வரி அருள்விழிகள் புகழ்மொழியைத் தான்மடுக்க
புலவர்கள் ஆனந்தங் கொள்வார்!

**பாராயண பலன் : அம்மை நோய் அகலும். தீப்புண் ஆறும்.**

**சிவே ச்ருங்காரார்த்ரா ததிதரஜநே குத்ஸனபரா**
**ஸரோஷா கங்காயாம் கிரிசசரிதே விஸ்மயவதீ**
**ஹராஹிப்யோ பீதா ஸரஸிருஹ ஸௌபாக்யஜனனீ**
**ஸகீஷுஸ்மேரா தே மயி ஜநநி த்ருஷ்டி: ஸகருணா** 51

**சிருங்காரம்**

சதாசிவனைப் பார்க்குங்கால் சிருங்காரம், சதாசிவனின்
சத்ருக்களை கண்டாலோ அருவருப்பு,
மகாகங்கை தனைநினைக்க பெருங்கோபம், மன்னவனின்
மாநெற்றிக் கண்கலக்க அற்புதமும்
தபோஸர்ப்பங் களைநோக்க பயமாகித் தனிச்சிவப்புத்
தாமரையாய் விழிமாற, சகிகளிடம்
சதாகொஞ்சிச் சிரித்திருக்கும் என்னிடமோ கருணையெனும்
சரமழையாய் பெய்யுமுந்தன் பார்வை!

**பாராயண பலன் : கண்ணோட்டம் சிறக்கும்.**

**கதே கர்ணாப்யர்ணம் கருத இவ பக்ஷ்மாணி தததீ**
**புராம் பேத்து: சித்தப்ரசமரஸ வித்ராவணஃபலே**
**இமே நேத்ரே கோத்ராதரபதி குலோத்தம்சகலிகே**
**தவ ஆகர்ணாக்ருஷ்ட ஸ்மரசர விலாஸம் கலயத:** 52

**அம்புவிழி**

தும்பைப்பூ நிறச்செவியைத் தொட்டிருக்கும் விழிகொண்ட
தூயபனி மலையரசன் குலவிளக்கே!
அம்புக்கு இருபுறமும் அழகிறகு இருப்பதுபோல்
அம்புவிழி அணிரோமங் கொண்டு
தம்பக்கம் இழுத்தந்த சிவனுடைய சாந்திரசம்
நிலைகுலையச் செய்வதொடு காமன்வில்
அம்பாகக் காதுவரை அணிசெய்யும், நிகரில்லா
சிருங்கார ரசம்சொட்டும் வாழ்விக்கும்!

**பாராயண பலன் : கண்நோய் தீரும்.**

**விபக்தத்ரைவர்ண்யம் வ்யதிகரித லீலாஞ்ஜநதயா**
**விபாதி த்வந்நேத்ரத்ரிதயமிதம் ஈசாநதயிதே**
**புந: ஸ்ரஷ்டும் தேவாந் த்ருகிண ஹரிருத்ராந் உபரதாந்**
**ரஜ: ஸத்வம் பிப்ரத்தம இதி குணாநாம் த்ரயமிவ** 53

**முக்குணம்**

பரமனவன் அன்புக்குப் பாத்திரமாய் விளங்கும்
பார்வதீ உனதுவிழி வண்ணம்
கருப்பாக, சிவப்பாக, வெளுப்பாகத் தோன்றும்
கருமைநீ தீட்டியது விளையாட்டாய்
அருஞ்சிவப்பும் வெளுப்பும் விழியுள்ளே இலங்கும்
அம்மூன்று குணத்தினையும் கொண்டு
பிரும்மனையும் விஷ்ணுவையும் சிவனையும் ஊழிப்பின்
உருவாக்கித் தரத்தானே யம்மா!

**பாராயண பலன் : பயணத்தடை நீங்கும்**

**பவித்ரீகர்த்தும் ந: பசுபதிபராதீநஹ்ருதயே**
**தயாமித்ரைர்நேத்தை: அருணதவலச்யாம ருசிபி:**
**நத: சோணோ கங்கா தபந தநயேதி த்ருவமமும்**
**த்ரயாணாம் தீர்த்தானாம் உபநயஸி சம்பேதமநகம்** 54

**முக்தி**

செவ்வரியும் வெண்வரியும் கருரேகைக் கண்வரியும்
வெவ்வேறு வழிகளிலே செல்கின்ற
செவ்வண்ணச் சோணாறு கீழ்கங்கை கருயமுனை
சேர்கின்ற சங்கமத்தை போல
ஒவ்வாத பாவத்தைச் சுழுவியெம்மைப் புனிதமாக்கி
உறுதியாக முக்தியினை நல்கும்!
பவ்யமான குணத்தோடு பரமனது அடிபணியும்
தேவதையுன் விழிக்கருணை வெள்ளம்!

**பாராயண பலன் : நாட்பட்ட வியாதிகள் தீரும்.**

**நிமேஷோந்மேஷாப்யாம் ப்ரலயமுதயம் யாதி ஜகதீ**
**தவேத்யாஹு: ஸந்தோ தரணிதர ராஜந்யதநயே**
**த்வதுந்மேஷாஜ்ஜாதம் ஜகதிதமசேஷம் ப்ரலயத:**
**பரித்ராதும் ஸங்கே பரிஹ்ருதநிமேஷாஸ்தவ த்ருச:** 55

**கருணை**

இமவானின் தவமகளுன் விழிதிறக்க உலகாகும்
இமைமூட உலகழியு மென்று
சமதிருஷ்டி ஸ்ருஷ்டிகளின் சித்தாந்த அறிஞர்கள்
சாற்றுகின்ற காரணத்தி னாலோ
இமைகொட்டா திருக்கின்றாய், இவ்வுலகம் அழியாமல்
இருப்பதுவும் நின்கருணை யன்றோ
எமைகாக்கும் இக்கருணை என்றென்றும் வாழ்கவென
இருகரமும் சிரங்கூப்பித் தொழுதேன்

**பாராயண பலன் : நட்பு நிலைக்கும்.**

**தவாபர்ணே கர்ணே ஜபநயந பைசுந்யசகிதா**
**நிலீயந்தே தோயே நியதமநிமேஷா: சபரிகா:**
**இயம் ஸ ஸ்ரீர்பத்தச்சதபுடகவாடம் குவலயம்**
**ஜஹாதி ப்ரத்யூஷே நிசிச விகடய்ய ப்ரவிசதி** 56

**மீன் விழி**

கருவிழிகள் காதுவரை மேவுவதைக் கண்டு
கலகம்வரும் கோள்சொல்ல வென்று
சிறுவிழிகள் இமையாத மீனோடி மறையும்
சேருகின்ற அச்சத்தி னாலே!
பரவுமொளித் திருமகள் பசுமைவிழிப் பார்வையில்
பகல்முழுதும் உறைந்து நிலவின்
இரவினிலே மலர்கின்ற கருநெய்தல் பூவமர்ந்து
எழிற்காலை விழிவீடு வருவாள்!

**பாராயண பலன் : சிறைவாசம் நீங்கும், வைராக்யம் சித்திக்கும்**

**த்ருசா த்ராகீயஸ்யா தரதலித நீலோத்பலருசா**
**தவீயாம்ஸம் தீநம் ஸ்நபய க்ருபயா மாமபி சிவே**
**அநேநாயம் தந்யோ பவதி நசதே ஹாநிரியதா**
**வநேவா ஹர்ம்யேவா ஸமகரநிபாதோ ஹிமகர:** 57

**எழில் நிலவு**

மலர்ந்தும் மலராத கருநெய்தல் மலர்போல
மயக்குமுன் கடைக்கண்ணின் பார்வை
வளர்ந்து காதுவரை நீண்டு, மங்களங்கள்
வழங்கும் சால்புடைய தன்றோ!
எழுந்த மாளிகையோ, இருட்காடோ வென்றாலும்
எழில்நிலவு ஒளிவீசு முகமாக
பொருந்தும் பார்வையினால் புண்ணியமும் பெருநிதியும்
விரைந்து பெற்றுநான் உய்வேன்!

**பாராயண பலன் : பஞ்சம் தீர்ந்து சுபிக்ஷம் நிலவும்.**

அராலம் தே பாலீயுகலம் அகராஜந்யதநயே
நகேஷாமாதத்தே குஸுமசர கோதண்ட குதுகம்
திரச்சீநோ யத்ர ச்ரவணபதமுல்லங்க்ய விலஸந்
அபாங்கவ்யாஸங்கோ திசதி சரஸந்தாநதிஷணாம் 58

**மலர் பாணம்**

கண்ணுக்கும் காதுக்கும் இடைப்பட்ட கன்னங்கள்
காமன்வில் வளைவழகுக் காவியமோ
கன்னங்க ளதைத்தாண்டி காதுவரை மேவிப்பின்
காதுக ளதையும் மீறி
மின்னல் பிரகாசமாய் மின்னுகின்ற நின்பார்வை
மேருமலை ராசன் மகளே
மன்மதன் தொடுத்த மலர்பாணந் தானோ
மயங்குதம்மா பக்தன் மனது!

**பாராயண பலன் : தொற்றுநோய் அகலும் மனஉறுதி நிலைக்கும்.**

ஸ்புரத்கண்டாபோகப்ரதிபலித தாடங்கயுகலம்
சதுச்சக்ரம் மந்யே தவ முகமிதம் மன்மத ரதம்
யமாருஹ்ய த்ருஹ்யதி அவநிரதம் அர்க்கேந்துசரணம்
மாஹாவீரோ மார: ப்ரமதபதயே ஸஜ்ஜிதவதே 59

**துணிவு**

பகவதியுன் ஸ்ரீசக்ர மொளிர்கின்ற கன்னத்தின்
பட்டுமுக ரதமதிலே யேறி
"பகலவனும் சந்திரனும் சக்கரங்க ளான
பூமியெனும் தேரேறி வென்ற"
பகவான் பரமேசன் எதிர்நின்று சமர்புரிய
மன்மதன் துணிந்ததன் காரணம்
முகத்தில் நான்கு சக்கரம் கொண்டவுன்
*முழுவருள் பெற்ற தாலன்றோ!*

**பாராயண பலன் : இல்லறம் சிறக்கும்.**

**ஸரஸ்வத்யா: ஸூக்தீ: அம்ருதலஹரீ கௌசலஹரீ:**
**பிபந்த்யா: சர்வாணி ச்ரவண சுலுகாப்யாம் அவிரலம்**
**சமத்கார ச்லாகாசலிதசிரஸ: குண்டலகணோ**
**ஜனத்காரை ஸ்தாரை: ப்ரதிவசநமாசஷ்ட இவதே** 60

**வாக்கினிமை**

பரமசிவன் பத்தினியே உன்வாக்கின் இனிமை
பருகியவர் அமுதத்தை வேண்டார்
நிறைவான நின்சொல்லை செவிமடுத்த வாணி
தலையசைக்க காதணிகள் ஆடி
வருகின்ற ஒலிகூட ஜதிஸ்வரங் களாகி
வாக்கினிமை ஆமோதிப் பதாக
இருக்கின்ற தென்கின்றேன் இனிமையும் வெற்றியும்
எல்லார்க்கும் அருள்கஉன் வாக்கு!

**பாராயண பலன் : வாக்கு பலிதமாகும்.**

**அஸௌ நாஸாவம்ச துஹிநகிரிவம்ச த்வஜபடி**
**த்வதீயோ நேதீய: பலது பலம் அஸ்மாகமுசிதம்**
**வஹத்யந்தர்முக்தா: ஸஸிரகர-நிச்’வாஸ கலிதம்**
**ஸம்ருத்யா யத்தாஸாம் பஹிரபி ஸ முக்தாமணிதர:** 61

**எழில் நாசி**

பனிமலை யரசனின் குலக்கொடி யாக
பாரில் தழைத்த பகவதியே
நனியெழில் நாசி மூங்கில் தனக்குள்
நன்முத் தங்களைத் தாங்கியதோ
இடப்புறச் சந்திர நாடியைத் தாண்டிய
காற்றது முத்தைத் தள்ளியதோ
அடையும் நற்பயன் விரைவில் அடைய
அழகிய நாசியருு ளட்டும்!

**பாராயண பலன் : மனோரதம் நிறைவேறும்**

ப்ரக்ருத்ய ரக்தாயாஸ்த்தவ ஸுததி தந்தச்சதருசே:
ப்ரவக்ஷ்யே ஸாத்ருச்யம் ஜனயது பலம்வித்ருமலதா
ந பிம்பம் தத்பிம்பப்ரதிபலநராகாத் அருணிதம்
துலாம் அத்யாரோடும் கதமிவ விலஜ்ஜேத கலயா 62

### புன்னகை

முத்தெனும் பற்களில் மின்னலின் புன்னகை
முத்தமிடும் எந்தன் தேவியே
எத்தனை சிவப்பு இதழின் வண்ணமென்
றெப்படி உரைப்பேன் கவியிலே
அத்தனை சிவப்பு என்னலா மானால்
பவளம் பழுப்பதில் லையே
இத்தனை சிவப்பு என்றாலோ கோவைக்
கனியும் மறுத்துவெட் கமுறும்!

**பாராயண பலன் : உடல், மன இறுக்கம் அகலும்.**

ஸ்மிதஜ்யோத்ஸ்நாஜாலம் தவ வதந-சந்த்ரஸ்யபிபதாம்
சகோராணாம் ஆஸீத் அதிரஸதயா சஞ்சுஜடிமா
அதஸ்தே சீதாம்சோ: அம்ருதலஹரீம் ஆம்லருசய:
பிபந்தி ஸ்வச்சந்தம் நிஸிநிஸி ப்ருசம் காஞ்ஜிகதியா 63

### பூமுகம்

பொன்நிலா முகத்தின் புன்னகை அமுதத்தை
போதும் போதும் எனமாந்தித்
தன்னிலை திகட்ட தவித்துத் தவித்துத்
தக்கவோர் மாற்று தனைத்தேடி
வெண்ணிலா ஒளியின் அமுதைப் புளிப்பாய்
எண்ணியே யுண்ணும் சகோரங்கள்
நன்னிலை யருளவந் நகையின் பூமுகம்
நாடித் தொழுதேன் நாயகியே!

**பாராயண பலன் : ஆன்மீக முயற்சிகள் வெல்லும்**

**அவிச்ராந்தம் பத்யுர்குண-கண-கதாம்ரேடநஜடா**
**ஜடாபுஷ்பச்சாயா தவ ஜநநி ஜிஹ்வா ஜயதி ஸா**
**யதக்ராஸீநாயா: ஸ்படிகத்ருஷதச்சச்சவிமயீ**
**ஸரஸ்வத்யா மூர்த்தி: பரிணமதி மாணிக்ய-வபுஷா** 64

**திருநாக்கு**

செம்பருத்திப் பூப்போன்ற திருநாக்குப் பரமேசன்
திவ்விய சரித்திரத்தை செப்புவதால்
செம்மாந்து இருக்கின்ற தம்மாயந் நாநுனியில்
திகழ்கின்ற சரஸ்வதியின் தூநிறமும்
உன்நாவின் நிறம்பட மாணிக்கச் சிவப்பாகி
ஒளிகூடிச் ஜொலிக்கின்ற தம்மா!
அந்நாவின் மங்களங்கள் அளிக்கின்ற நற்குணங்கள்
எந்நாளும் பக்தர்களுக் காக!

**பாராயண பலன் : வாணி கடாட்சம் கிடைக்கும்.**

**ரணேஜித்வா தைத்யாந் அபஹ்ருதசிர ஸ்த்ரை: கவசிபி:**
**நிவ்ருத்தை: சண்டாம்ச த்ரிபுர-ஹர நிர்மால்யவிமுகை:**
**விசாகேந்த்ரோபேந்த்ரை: ஸஸிவிசத கர்ப்பூரசகலா**
**விலீயந்தே மாதஸ்தவ வதநதாம்பூலகபலா:** 65

**நிர்மால்யம்**

போரில் வென்று கவசத் துடனே
பொன்முடி கைகளில் இருக்க
நேரில் வந்த முருகன் விஷ்ணு
இந்திரன் முதலோர் உந்தன்
வாயின் பச்சைக் கற்பூர தாம்பூலம்
வாங்கியே உண்டு மகிழ்வார்
தாயின் அன்பு நிர்மால்ய மெண்ணியே
சண்டிகே சன்பாகம் தவிர்த்தார்!

**பாராயண பலன் : வெற்றி நிச்சயமாகும்.**

விபஞ்ச்யா காயந்தீ விவிதமபதாநம் புரரிபோ:
**த்வயாரப்தே வக்தும் சலிதசிரஸா ஸாதுவசநே**
**ததீயைர் மாதுர்யைரபலபிததந்த்ரீ கலரவாம்**
**நிஜாம் வீணாம் வாணீ நிசுலயதி சோலேந நிப்ருதம்** 66

**வாழ்த்து**

வரமருளும் பரமேசன் சரிதத்தைப் பாடலாய்
வாணியவள் வீணையிலே மீட்ட
பரமசந் தோஷத்தால் தலையசைத்த தேவிநீ
'சபாஷ்' என சரஸ்வதியை வாழ்த்த
அதிமதுரச் சொல்தனது இசைமிஞ்சிய தாலே
அவள்வீணை தனையுறையுள் பூட்டி
நிதியாக நின்வாக்கை மதித்தடுத்துச் சொல்கின்ற
வார்த்தைக்குக் காத்திருப்பாள் தாயே!

**பாராயண பலன் : சங்கீத ஞானம் பாராட்டு வரும்.**

**கராக்ரேண ஸ்ப்ருஷ்டம் துஹிநகிரிணா வத்ஸலதயா**
**கிரீசேனோதஸ்தம் முஹு: அதரபாநாகுல தயா**
**கரக்ராஹ்யம் சம்போ: முகமுகுரவ்ருந்தம் கிரிஸுதே**
**கதம்காரம் ப்ரூம: தவ சுபுகம் ஔபம்யரஹிதம்** 67

**வதனக் கண்ணாடி**

தந்தை மலைராசன் தாங்கிய முகவாய்!
எந்தை சிவனேற்றிக் காதலுடன்
சிந்தை குளிர செவ்விதழின் தேன்மடுக்க
சேர்ந்து நிமிர்ந்த தாடை!
விந்தை வதனக் கண்ணாடியைத் தாங்க
விளைந்த தோர்கைப் பிடியோ
முந்தும் வர்ணனையின் உவமையெலாம் தாண்டி
முன்னிற்கும் முகவாயின் அழகு!

**பாராயண பலன் : தேவியின் அருள்பெறலாம்.**

**புஜாச்லேஷாந்நித்யம் புரதமயிது: கண்டகவதீ**
**தவ க்ரீவா தத்தே முககமலநாலச்ரியம் இயம்**
**ஸ்வத: ச்வேதா காலாகுருபஹு ளஜம்பாலமலிநா**
**ம்ருணாலீலாலித்யம் வஹதி யததோஹாரலதிகா** 68

**ஸௌபாக்யம்**

முப்புறமும் சுட்டெரித்த முக்கண்ணன் கையணைப்பில்
அனுதினமும் சுகங்கொள்வ தாலே
எப்புறமும் மயிர்சிலிர்க்க எழிலார்முன் தாமரையைத்
தாங்குகின்ற காம்பனைய கழுத்தில்
எப்பொழுது மாடுமின்ற முத்தாரம் அகில்வாச
சந்தனத்தை அப்பியதால் கருப்பாகி
ஒப்பில்லாத் தாமரையின் கொடிபோல ஸௌபாக்யம்
உடைத்தாக்கும் வணங்குகிறேன் தாயே!

**பாராயண பலன் : குருவருள் கிட்டும்.**

**கலே ரேகாஸ்திஸ்ரோ கதிகமக கீதைகநிபுணே**
**விவாஹ-வ்யாநத்த-ப்ரகுண-குணஸங்க்யா ப்ரதிபுவ:**
**விராஜந்தே நாநாவித-மதுர-ராகாகரபுவாம்**
**த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதி-நியம-ஸீமாந இவதே** 69

**மாங்கல்யம்**

கதிகமக கீதத்தில் மார்க்கதேசி ஸ்வரங்களதன்
கானத்தில் வல்லவளே தேவீ
மதிமுகத்தைத் தாங்குகின்ற மலர்க்கழுத்தின் வரிகள்
மணத்தன்று பரமேசன் முடித்த
மாங்கல்யச் சரடுகளை நினைவுறுத்து தம்மா!
மத்ய காந்தார ஷட்ஜம்
தேங்குகின்ற ஸ்தானத்தைத் தனித்தனியாய்க் காட்டும்
திசைக்கோடாய் திகழ்கின்ற தம்மா!

**பாராயண பலன் : கலைகளில் நிபுணத்துவம் பெறலாம்**

**ம்ருணாலீம்ருத்வீநாம் தவ புஜலதாநாம் சதஸ்ருணாம்**
**சதுர்பி: ஸௌந்தர்யம் ஸரஸிஜபவ: ஸ்தௌதி வதனை:**
**நகேப்ய: ஸந்த்ரஸ்யந் ப்ரதம-மதனாத் அந்தகரிபோ:**
**சதுர்ணாம் சீர்ஷாணாம் ஸமம் அபயஹஸ்தார்ப்பணதியா** 70

**துதி**

ஐந்தாம் தலையை சிவனார் நகத்தால்
அரிய அயனும், மிகக் கலங்கி
உய்ய உவந்து மீதத் தலைகளுக்
கபயம் அளிக்கத்தான் வேண்டி
செய்ய கமலக் கொடியை நிகர்த்த
தேவியுன் நான்குகரத் தழகை
மெய்வாய் நான்கும் துதிக்கத் தொழுவான்
மேவுமலர்க்க கரத்தோய் போற்றி!

**பாராயண பலன் : மேதா விலாசம், லாபம் உயர வழி கிடைக்கும்**

**நகாநாமுத்யோதை: நவ நலின ராகம் விஹஸதாம்**
**கராணாம் தே காந்திம் கதய கதயாம: கதமுமே**
**கயாசித்வா ஸாம்யம் பஜது கலயா ஹந்த கமலம்**
**யதி க்ரீடல்லக்ஷ்மீசரண தலலாக்ஷாரஸசணம்** 71

**மருதாணி**

பொழுதே மலர்ந்த தாமரைக் காந்தியை
புறங்கா ணும்கைந் நகங்கள்
அழகிய கரங்களின் அழகை நானும்
எப்படிச் சொல்வே னம்மா!
கொழுவிய கால்களில் மருதா ணியின்நிறம்
கொஞ்சிடும் திருமகள் இருக்கத்
தழுவிய சிவப்புத் தாமரைக் கிணையாய்
*சொன்னா லும்ச டாமோ?*

**பாராயண பலன் : தீயசக்திகள் அகலும்**

**ஸமம் தேவி ஸ்கந்த-த்விபவதன-பீதம் ஸ்தநயுகம்**
**தவேதம் ந:கேதம் ஹரது ஸததம் ப்ரஸ்நுதமுகம்**
**யதாலோக்ய ஆசங்காகுலித-ஹ்ருதயோ ஹாஸஜநக:**
**ஸ்வகும்பௌ ஹேரம்ப: பரிம்ருசதி ஹஸ்தேந ஜடிதி** 72

**அமுது**

மழலை முகங்கண்டு மகிழ்வோடு சுரந்து
முருகனுக்கும் கணபதிக்கும் அமுதூட்டும்
வளமை கொண்டவுன் தனங்கள் எங்கள்
வாட்டத்தைப் போக்கட்டும் தாயே!
தழுவியே பாலுண்ணும் விக்னேசன் தன்தலையைத்
தடவியே கும்பங்கள் சரிபார்க்க
குழவியின் செயல்கண்டு கோதைநீ சிவனோடு
சிரிக்கின்றாய், செழிக்களம் வாழ்க்கை!

**பாராயண பலன் : பயம் நீங்கி வாழ்க்கை செழிக்கும்.**

**அமூதே வக்ஷோஜௌ அம்ருத ரஸமாணிக்ய-குதுபௌ**
**ந ஸந்தேஹஸ்பந்தோ நகபதிபதாகே மநஸி ந:**
**பிபந்தௌ தௌ யஸ்மாத் அவிதித-வதூஸங்க-ரஸிகௌ**
**குமாராவத்யாபி த்விரதவதநக்ரௌஞ்சதலநௌ** 73

**மணிக்கும்பம்**

மாணிக்கக் கலசத்தில் அமுதத்தை நிரப்பிய
மணிக்கும்பம் நின்தனங்கள் ஐயமில்லை
காணிக்கை ஞானப்பால் மடுக்குங் கணபதியும்
கந்தனும் மாற்றங்க ளின்றி
வானுக்கும் மண்ணுக்கும் பாலகராய் இருக்கின்றார்
வளர்சுகத்துப் பெண்சேர்க்கை மறந்து!
ஊனுக்கு இளமையும் உயிருக்கு மேன்மையும்
ஊட்டுமுன் அமுதநகில் போற்றி!

**பாராயண பலன் : கோமாதா அருள்கிட்டும்**

**வஹத்யம்ப ஸ்தம்பேரம-தனுஜ கும்ப-ப்ரக்ருதிபி:**
**ஸமாரப்தாம் முக்தாமணிபி: அமலாம் ஹாரலதிகாம்**
**குசாபோகோ பிம்பாதரருசிபி: அந்த: சபலிதாம்**
**ப்ரதாப-வ்யாமிச்'ராம் புரதமயிது: கீர்த்திமிவதே** 74

**திருநாமம்**

களிற்றசுரன் மத்தகத்தின் முத்துக்கள் கோர்த்த
கவின்மாலை நின்மார்பில் தவழும்
பளிங்கனைய அம்முத்தில் பவளவாய் நிழல்படர
பலவண்ணச் சித்திரங்கள் காட்டும்
விழியாலே முப்புரத்தை வென்றழித்த பரமேசன்
கீர்த்தியொளி வீசுவதைப் போல
வெளுப்போடு சிவப்பாக விளங்குமாலை தரிக்கின்ற
தேவதையுன் திருநாமம் போற்றி!

**பாராயண பலன் : முக்தி கிட்டும்**

**தவ ஸ்தந்யம் மந்யே தரணிதரகன்யே ஹ்ருதயத:**
**பய: பாராவார: பரிவஹதி ஸாரஸ்வதமிவ**
**தயாவத்யா தத்தம் த்ரவிட-சிசு: ஆஸ்வாத்ய தவயத்**
**கவீநாம் ப்ரௌடாநாமஜநி கமநீய: கவயிதா** 75

**பாற்கடல்**

பனிமலை ராஜன் மகளே பார்வதி
நின்முலைத் தீம்பால் இதயத்தே
கனிவாய்ப் பெருகும் பாற்கடலோ, அன்றி
சாரஸ் வதசுரப் பிரவாகமோ
இனிய வவ்வமுதை உண்ட திராவிட
குழவியான் புலவோர் புகழும்
நனிநயக் கவியாய் மலர்ந்தே னல்லவோ
நாயகியுன் அமுதம் போற்றி!

**பாராயண பலன் : கற்பனைத்திறன் பெருகும்.**

**ஹரக்ரோதஜ்வாலாவலிபி: அவலீடேந வபுஷா**
**கபீரே தே நாபீஸரஸி க்ருதஸங்கோ மநஸிஜ:**
**ஸமுத்தஸ்தெள தஸ்மாத் அசல தநயே தூமலதிகா**
**ஜநஸ்தாம் ஜாநீதே தவஜனனி ரோமாவலிரிதி** 76

**அணி**

சிவனுடைய கோபத்தீ தாங்காது மன்மதனும்
சேர்ந்தா நுன்நாபிப் பூங்குளத்தில்!
தவநெருப்பில் நீர்சேர தனித்த புகையன்ன
தரித்தாய் ரோமங்கள் நாபியிலே!
சிவதேவீ இமவானின் செல்வத் திருமகளே
திகழ்ரோம பந்திசூழ்ந்த திருநாபி
அபயமென வந்தார்க்கு அருள்கூறுந் தத்துவத்தின்
அணியாகி நிற்கின்ற தம்மா!

**பாராயண பலன் : வள்ளல் குணம் பெருகும்.**

**யதேதத் காலிந்தீ தநுதர தரங்காக்ருதி சிவே**
**க்ருசே மத்யே கிஞ்சிஜ்ஜநதி தவ யத்பாதி ஸுதியாம்**
**விமர்தாத் அந்யோந்யம் குசகலசயோ: அந்தரகதம்**
**தநூபூதம் வ்யோம ப்ரவிசதிவ நாபிம் குஹரிணீம்** 77

**மேனி நுட்பம்**

பரமேசன் பத்தினியே பாரோர்க்கு அம்மையே!
பதிவிரதை உன்னிடையில் யமுனாவின்
கருநிறத்துச் சிற்றலைபோல் ரோமவரித் திகழ்கின்ற
காட்சியினை யோகியர்கள் அறிவார்கள்!
இருநகிலின் இடைப்பட்ட ஆகாச மாப்ரோம
அணியயந்து கீழிறங்கி நாபியிலே
ஒளிந்திடவே செய்கிறதோ எனவெண்ணத் தோன்றுதம்மா
உன்மேனி நுட்பங்கள் கோடி!

**பாராயண பலன் : அறிவில் தெளிவு, முயற்சிகளில் ஒருங்கிணைவு.**

**ஸ்திரோ கங்காவர்த: ஸ்தன முகுல ரோமாவ்லிலதா**
**கலாவாலம் குண்டம் குஸுமசர தேஜோ-ஹுதபுஜ:**
**ரதேர்லீலாகாரம் கிமபி தவ நாபிர்கிரிஸுதே**
**பிலத்வாரம் ஸித்தே: கிரிசநயநாநாம் விஜயதே** 78

### சிறுவீடு

அசையாத கங்கையின் சுழலாத சுழலோ
அரும்பாத கமலங்கள் தாங்கும்
இசைவான கொடிரோமத் தண்டுக்கு நீர்பாயும்
பாத்தியோ, மன்மதனின் காந்திக்கு
அக்கினிக் குண்டமோ, ரதிதேவி விளையாடும்
அழகுமிகு சிறுவீடு தானோ
முக்கண்ண பிரான்விழியின் தவசித்திக் குகைவழியோ
முடிவில்லாச் சௌந்தர்ய நாபி!

**பாராயண பலன் : முயற்சி அனுகூலம்.**

**நிஸர்கக்ஷீணஸ்ய ஸ்தனதடபரேண க்லமஜுஷோ**
**நமந்மூர்த்தே: நாரீதிலக சனகை: த்ருட்யத இவ**
**சிரம் தேமத்யஸ்ய த்ருடிததடிநீதீரதருணா**
**ஸமாவஸ்தாஸ்தேம்நோ பவது குசலம் சைலதனயே** 79

### பல்லாண்டு

பனிமலை புத்திரீ! பத்தினி ரத்தினம்!
பாவையுன் சிற்றிடை மெலிந்து
இனியும் மெலிய முடியா ததிர்ந்து
இருநகில் பாரமுந் தாங்கி
வெள்ள மரிக்க வீழும் நிலையில்
உள்ள மரம்போ லாக
உள்ள முருக வணங்குவேன் உன்னிடை
உய்க பல்லாண்டு தேவி!

**பாராயண பலன் : மாயை விலகும்.**

**குசெள ஸத்ய: ஸ்வித்யத் தடகடித-கூர்ப்பாஸ-பிதுரௌ**
**கஷந்தௌ தோர்மூலே கனககலசாபௌ கலயதா**
**தவ த்ராதும் பங்காத் அலமிதி வலக்நம் தநுபுவா**
**த்ரிதா நத்தம் தேவி த்ரிவலி லவலீ-வல்லிபிரிவ** 80

### வல்லிக்கொடி

சிவகீர்த்தி தனைநினைக்க சிலிர்த்தெழுமுன் வேட்கையினால்
        சேர்கனக குடத்தனங்கள் விம்ம
புகவேர்வை பூரித்த புஜஇடுக்கில் கஞ்சுகம்தான்
        போர்த்தும் வலுவிழந்து கிழிய
நகில்பாரந் தாங்காமல் இடையொடியு மெனப்பயந்து
        நாயகீயுன் சிற்றிடையின் மீது
திகழ்மடிப்பு மூவரியாய் வல்லிக்கொடி தன்னை
        சேர்த்ததுமதன் இணைத்தானோ தாயே!

**பாராயண பலன் : நிர்வாகத்திறன் அதிகரிக்கும்.**

**குருத்வம் விஸ்தாரம் க்ஷிதிதரபதி: பார்வதி நிஜாத்**
**நிதம்பாத் ஆச்சித்ய த்வயி ஹரணரூபேண நிததே**
**அதஸ்தே விஸ்தீர்ணோ குருதயமசேஷாம் வஸுமதீம்**
**நிதம்ப-ப்ராக்பார: ஸ்தகயதி லகுத்வம் நயதிச** 81

### சீதனம்

மாமலையின் மகளேயுன் மணக்காலந் தனிலே
        மலையரசன் இமவானும் மகிழ்ந்து
சீதனமாய்த் தந்தானோ செரிந்துநல்ல கனமாகித்
        தாழ்வரையில் விரிவாகுந்த தன்மையினை!
மாதேவிப் பின்பாகம் அகண்டுபுவி தனைமறைத்து
        மண்ணகத்தை லேசாக்கி விட்டதம்மா!
பூபாகம் மறைக்கின்ற பூந்தேகம் கொண்டவளை
        பூஜிக்க மனப்பாரம் நீங்கும்!

**பாராயண பலன் : அகமும், புறமும் கட்டுக்கடங்கும்.**

**கரீந்த்ராணாம் சுண்டாந் கநககதலீ காண்டபடலீம்**
**உபாப்யாம் ஊருப்யாம் உபயமபி நிர்ஜித்ய பவதி**
**ஸுவ்ருத்தாப்யாம் பத்யு: ப்ரணதி-கடிநாப்யாம் கிரிஸுதே**
**விதிஜ்ஞே ஜானுப்யாம் விபுதகரிகும்பத்வயமஸி** 82

**கனக வாழை**

நாயகனை வணங்குகின்ற விதியறிந்த நாயகியுன்
நனியழகுத் தொடை யிரண்டும்
பாயுங்கரி துதிக்கையை, கனகவாழைப் பொன்னிறத்தை
பழிக்கின்ற எழிலோடு விளங்கும்!
சாயுவட்ட முழந்தாழும் தரைதொட்டுக் கட்டிறுகி
ஐராவத சிரக்கும்பம் வெல்லும்
நேயர்மனத் துறைபவளே நின்கால்கள் நெஞ்சிறுத்தி
தியானிக்க வெற்றிக்களிப் பாகும்!

**பாராயண பலன் : காலம் கனியும். இடைவெளி மறையும்.**

**பராஜேதும் ருத்ரம் த்விகுண-சரகர்பௌ கிரிஸுதே**
**நிஷங்கௌ ஜங்கே தே விஷம-விசிகோ பாடமக்ருத**
**யதக்ரே த்ருச்யந்தே தஸஸரபலா: பாதயுகலீ**
**நகாக்ரச்சத்மாந: ஸுரமகுடசாணைக நிசிதா:** 83

**மன்மத பாணம்**

தனதைந்து பாணங்கள் போதாமல் நின்கணுக்கால்
தனையம்ப றாத்துணியாய் மன்மதன்
நினைத்ததிலே பாணங்கள் நிரப்பிவைத்தான் அச்சுரங்கள்
நின்பாதப் பத்துவிரல் களாகும்
கணைதீட்டு இரும்புநுனி நகங்கூராய் இலங்குகிற
காரணம் தேவருனை வணங்க
மணிமுடிகள் தீட்டுவதே யாகும், அக்கணையை
மதனெய்ய சிவன்தோற்றான் வியப்போ?

**பாராயண பலன் : களவெற்றி சுலபமாகும்.**

**ச்ருதீநாம் மூர்த்தாநோ தததி தவ யௌ சேகரதயா**
**மமாப்யேதௌ மாத: ஸிரஸி தயயா தேஹி சரணௌ**
**யயோ: பாத்யம் பாத: பசுபதிஜடாஜூடதடிநீ**
**யயோ: லாக்ஷாலக்ஷ்மீ: அருணஹரிசூடாமணிருசி:** 84

### சேவடிகள்

மறைகளுக்குத் தலையாய உபநிடதம் தன்சிரசில்
 மகிழ்தணிந்து கொள்ளுகின்ற திருவடியை,
இறைவனவன் முடியமர்ந்த புனிதநதி கங்கையவள்
 நீராட்டி சிலிர்க்கின்ற சேவடியை,
கறைபடியா விஷ்ணுமுடி கௌஸ்துப காந்தியுந்தன்
 கால்பூசிய மருதாணிச் சிவப்பின்
நிறையொளியோ என்றெண்ணி மகிழ்கின்றேன் அவ்வடியை
 ஏழையென் சிரம்சூட்டு தாயே!

**பாராயண பலன் : பிறர்மனதறிந்து செயல்பட முடியும்.**

**நமோவாகம் ப்ரூமோநயந ரமணீயாய பதயோ:**
**தவாஸ்மை த்வந்த்வாய ஸ்புடருசி ரஸாலக்தகவதே**
**அஸூயத்யந்தம் யதபிஹநநாய-ஸ்ப்ருஹயதே**
**பஸூநாமீசாந: ப்ரமதவந கங்கேலிதரவே** 85

### பரவசம்

பார்க்கப், பார்க்கப் பரவச மூட்டும்
 பளிச்சென ஒளியுடன் திகழும்,
ஈர்க்கும் மருதா ணியின்நிற அடிகளை
 பணிந்தேன் வணக்கம் தாயே!
பூக்கும் அசோக மரத்திலுன் கால்படும்
 புண்ணிய மதனைக் கண்டு
ஏக்கம் கொண்டு பசுபதி மனதுள்
 எரிச்சல் அடைகிறான் தேவீ!

**பாராயண பலன் : பாதுகாப்பு உறுதியாகும்.**

ம்ருஷா க்ருத்வா கோத்ர ஸ்கலநம் அதவைலக்ஷ்யநமிதம்
லலாடே பர்த்தாரம் சரணகமலே தாடயதிதே
சிராதந்த: சல்யம் தஹநக்ருதம் உந்மூலிதவதா
துலாகோடிக்வாணை: கிலிகிலிதம் ஈசாநரிபுணா 86

### சூடும் பாதம்

நாடும் பரமன் வேறொரு பெண்ணின்
பெயரா லழைத்து உனைச்சீண்ட
ஊடலில் உன்கால் அவனின்நெற் றிக்கண்பட
ஊசல் சலங்கையின் ஓசையிலே
பாடம் மறந்து மன்மதன் வெற்றிப்
பாடல் இசைக்கிறான் போலுமம்மா
சூடும் பாதம் சூடி மகிழ்வேன்
சொல்லால் துதிப்பேன்நா னம்மா!

**பாராயண பலன் : மறைமுக எதிர்ப்பு அகலும்.**

ஹிமாநீஹந்தவ்யம் ஹிமகிரிநி நிவாஸைக சதுரௌ
நிசாயாம் நித்ராணாம் நிசி சரமபாகே சவிசதௌ
வரம் லக்ஷ்மீபாத்ரம் ச்ரியமதி ஸ்ருஜந்தௌ ஸமயிநாம்
ஸரோஜம் த்வத்பாதௌ ஜனனி ஜயதச்சித்ரமிஹகிம் 87

### போற்றி

இமயமலைப் பனியில் எக்காலும் மலர்ந்து
எழில்கூட்டும் உனதடியை எண்ணி
'ஸமய' வழி கண்டு சக்திபூஜை செய்வார்
லக்ஷ்மியவள் முழுவருளைப் பெறுவார்
இரவினிலே யுறங்கி பகல்வேளை மலர்ந்து
பனிதனிலே வாடி யுதிரும்
திருமகள் உறையுங் கமலத்தை வென்ற
திருவடிகள் போற்றி போற்றி!

**பாராயண பலன் : விஷபயம் நீங்கும். வருமானம் பெருகும்.**

**பதம் தே கீர்த்தீனாம் ப்ரபத-மபதம் தேவி விபதாம்**
**கதம் நீதம் ஸத்பி: கடின-கமடீகர்பரதுலாம்**
**கதம்வா பாஹுப்யாம் உபயமனகாலே புரபிதா**
**யதாதாய ந்யஸ்தம் த்ருசதி தயமானேன மனஸா** 88

**பீடம்**

புகழுரையும் வீடாம், இன்னல்கள் எஞ்ஞான்றும்
புகமுடியா கூடாமுன் திருவடியை
தகவுடைய கவிஞர்கள் ஆமைமுது கோட்டிற்கிணை
சாற்றிய தத்துவங்கள் அறியேன்நான்
ஜெகதீஸ்வரி நின்பஞ்சு மெல்லடியை ஈஸ்வரன்
எப்படித்தான் அம்மிமீது வைத்தான்?
இகபரத்தின் சுகங்காட்டி அருளுகின்ற திருவடியின்
பீடத்தைப் பணிகின்றேன் தாயே!

**பாராயண பலன் : பலமுள்ளோரை பணிய வைக்கும்.**

**நகைர் நாகஸ்த்ரீணாம் கரகமல ஸங்கோச ஸிஸிபி:**
**தருணாம் திவ்யானாம் ஹஸத இவ தே சண்டி சரணௌ**
**பலானி ஸ்வ: ஸ்தேப்ய: கிஸலய கராக்ரேண ததாம்**
**தரித்ரேப்யோ பத்ராம் ச்ரியம் அனிசமஹ்னாய ததெள** 89

**கற்பகம்**

வேண்டும் தேவருக்கு வேண்டிய தளிக்கும்
கற்பகம், உந்தன் திருவடியோ
வேண்டும் ஏழையர்க் கெல்லா மளிக்கும்
வேண்டிய கணமே சண்டிகையே!
தூண்டும் சந்திரத் திருவடி நகங்கள்
நகைத்துச் சிந்தும் காந்தியிலே
வேண்டும் தேவதைக் கரமலர் குவியும்
வெற்றித் திருவடிப்புகழ் போற்றி!

**பாராயண பலன் : தீரா வியாதிகள் தீரும்**

**ததாநே தீனேப்ய: ச்ரியமனிசமாசானு ஸத்ருசீம்**
**அமந்தம் ஸௌந்தர்யப்ரகர மகரந்தம் விகிரதி**
**தவாஸ்மிந் மந்தார ஸ்தபகஸுபகேயாது சரணே**
**நிமஜ்ஜந் மஜ்ஜீவ: கரணசரண: ஷட்-சரணதாம்** **90**

**வரம் வேண்டும்**

வறியவர்கள் துயர்நீக்கி வரையில்லா பொருளீயும்
வடிவழகு வாழ்வுத்தேன் பொங்கும்
செறிகற்பக தருக்கிளையின் பூங்கொத் தாகி
சிந்துமணத் திருவடியாம் மலருள்ளே
அறியுமனக் காலோடும் ஐம்புலன்க ளதனோடும்
ஆறுகால் வண்டாக நுழைந்து
நறுமணத்தை நுகர்ந்து நற்றேனை யுண்டு
நானிருக்க வரம்வேண்டும் தாயே!

**பாராயண பலன் : எதிர்ப்புகள் நீங்கும்.**

**பதன்யாஸக்ரீடா பரிசயம் இவாரப்து மனஸ:**
**ஸ்கலந்தஸ்தே கேலம் பவன-கலஹம்ஸான ஜஹதி**
**அதஸ்தேஷாம் சிக்ஷாம் ஸுபகமணி மஞ்ஜீர ரணித**
**சலாத் ஆசக்ஷாணம் சரண-கமலம் சாருசரிதே** **91**

**புவனேஸ்வரி**

மின்னலிடை ஒசிந்தாடும் உந்தன்நடை போடவெண்ணி
புண்யதேக புவனேஸ்வரித் தாயே
அன்னங்கள் தடுமாறி நடைபயின்று பழகும்
அவைகளுக்குப் பாடம்சொல்லத் தானோ
என்னன்னை நின்பாதக் கமலத்தில் சேர்ந்த
அணிரத்னப் பாதரஸ சப்தம்
இன்னிசையாய் தாளத்தோ டொலிக்கிறதோ என்றே
*எண்ணுகிறேன் நின்கருணை போற்றி!*

**பாராயண பலன் : நீங்காத செல்வம், புகழ், பித்ருக்களின் ஆசி கிடைக்கும்**

**கதாஸ்தே மஞ்சத்வம் த்ருஹிணஹரிருத்ரேச்வர ப்ருத:**
**சிவ: ஸ்வச்சச்சாயாகடித கபடப்ரச்சதபட:**
**த்வதீயாநாம் பாஸாம் ப்ரதிபலந ராகாருணதயா**
**ஸரீரீ ச்ருங்காரோ ரஸ இவ த்ருசா'ம் தோக்தி குதுகம்** 92

**திருவருள்**

நான்முகனும் விஷ்ணுவும் ருத்திரனும் ஈஸ்வரனும்
நாயகீயுன் கட்டிற்கால் களாகி
மேன்மேலும் அருகிருந்து சேவித்து மகிழ்ந்து
தேவியுன் திருவருவருளைப் பெறுவார்
தூநிறத்து வெண்பட்டைப் போர்வையென அணிந்தவனாய்த்
துலங்குகின்ற உனதன்பு சதாசிவனுன்
மேனியெழில் வீசுகின்ற காந்தியிலே சிவப்பாகி
மிஞ்சுசிருங்கா ரசமாசி மகிழ்விப்பான்!

**பாராயண பலன் : வேத ஞானம் பெறுவர்.**

**அராலா கேசேஷு ப்ரக்ருதிஸரலா மந்தஹஸிதே**
**சிரீஷாபா சித்தே த்ருஷதுபலசோபா குசதடே**
**ப்ருசம் தன்வீ மத்யே ப்ருதுருரஸிஜாரோஹ-விஷயே**
**ஜகத்ராதும் ஸம்போர்ஜயதி கருணா காசிதருணா** 93

**அம்மை**

மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாது செந்நிறமாய்
மகேஸ்வரனின் கிருபையான தாயே
உனதுநகை இயற்கைஎழில் உனதுமனம் வாகைப்பூ
உனதுதனம் மாணிக்கம், இடையோகொடி
கனத்தகன்ற பின்புறமும் பருத்திருக்கும் நகிலோடும்
காந்திவீசும் நுட்பமான மேனியினால்
அனைத்துலகும் காக்கின்ற அம்மையே பராசக்தி
அடியவனுன் அடிபணிந்தே னம்மா!

**பாராயண பலன் : உலக நன்மை, சமாதானம் பெருகும்**

**கலங்க: கஸ்தூரீ ரஜநிகர-பிம்பம் ஜலமயம்**
**கலாபி: கர்ப்பூரை மரகத-கரண்டம் நிபிடிதம்**
**அதஸ்த்வத்போகேந ப்ரதி தினமிதம் ரிக்தகுஹரம்**
**விதிர்பூயோ பூயோ நிபிடயதி நூதம் தவக்ருதே** 94

**அபிஷேகம்**

மரகர மிழைத்த சந்திர மண்டலம்
மாசக்தி நீராடும் பாண்டமாய்
விரவிய கஸ்தூரி மதியின் களங்கமாய்
நிலவொளிப் பன்னீ ராக
கிரகணமே பச்சைக் கற்பூரப் பொடியாய்
கொண்டுன தபிஷேக மதற்கு
பிரம்மனே தினமும் நீர்மொண்டு நிரப்புவான்
நிலாவளரும் நின்னைநீ ராட்ட!

**பாராயண பலன் : பிறவிப்பயன் கிட்டும்**

**புராராதேரந்த: புரமஸி ததஸ்த்வச்சரணயோ:**
**சபர்யாமர்யாதா தரல-கரணாநாம் அஸுலபா**
**ததா ஹ்யேதே நீதா: சதமகமுகா: ஸித்திமதுலாம்**
**தவ த்வாரோபாந்தஸ்திதிபி: அணிமாத்யாபி: அமரா:** 95

**பாதகதி**

புலன்களை அடக்கி புனிதத்தை சித்தத்தில்
புதுக்கிய பக்தர்க்கு மட்டுமே
நலன்களை அளிக்கின்ற பரமேசன் மகிஷியாம்
நாயகியுன் பாதகதி கிட்டும்
உலகேற்றும் இந்திராதி தேவர்களும் கூட
உன்வாசல் எண்ஸித்தி யோடு
கலந்தருளைப் பெற்றதுடன் மீண்டார், கவிவாணர்
கற்பனையில் உனைக்கண்டு தொழுவார்!

**பாராயண பலன் : தேகம் நலம் பெறும்**

**கலத்ரம் வைதாத்ரம் கதிகதி பஜந்தே ந கவய:**
**ச்ரியோ தேவ்யா: கோ வா ந பவதி பதி: கைரபிதனை:**
**மஹாதேவம் ஹித்வா தவ ஸதி ஸதீநாமசரமே**
**குசாப்யாமாஸங்க: குரவக-தரோரபி அஸுலப:** 96

**தர்மம்**

அரிதான கல்வியை அடைகின்ற கவிஞரிடம்
அகமகிழ வீற்றிருப்பாள் வாணி
வருமானம், செல்வங்கள் வாய்த்திருக்கும் பேர்களிடம்
வாஞ்சையுடன் சேர்ந்திருப்பாள் லக்ஷ்மி
மருதாணி மரங்கூட தீண்டாத உன்நகிலை
மாசக்தி உனதுபதிஎன் பதினால்
பரமசிவன் தனையன்றி யார்கொண்டார் அம்மையுன்
பத்தினித் தன்மையைப் போற்றுவேன்!

**பாராயண பலன் : மனப்புண் ஆறும், சாந்தி தழைக்கும்.**

**கிராமாஹுர்தேவீம் த்ருஹிணக்ருஹிணீம் ஆகமவிதோ**
**ஹரே: பத்நீம் பத்மாம் ஹரஸஹசரீம் அத்ரிதனயாம்**
**துரீயா காபி த்வம் துரதிகம-நிஸ்ஸீம-மகிமா**
**மஹாமாயா விஸ்வம் ப்ரமயஸி பரப்ரஹ்ம-மஹிஷி** 97

**மாமாயை**

நான்முகன் பத்தினி சரஸ்வதியும் நீயே
நாயகன் விஷ்ணுவின் துணைவியாம்
தேன்மலர் உறைகின்ற லக்ஷ்மியும் நீயே
சிவனாரின் பார்வதியும் நீயே
ஏனெனில் சக்தித் தத்துவம் ஒன்றென
இயம்புவார் வேதங்க ளறிந்தோர்
ஆனாலும் நீயோ மனவாக்கிற் கெட்டாத
நான்காகி மாமாயை யானாய்!

**பாராயண பலன் : தனித்வம் பெறலாம்.**

கதா காலே மாத: கதய கலிதாலக்த கரஸம்
பிபேயம் வித்யார்த்தீ தவ சரண-நிர்ணேஜந ஜலம்
ப்ரக்ருத்யா மூகாநாமபி ச கவிதாகாரணதயா
கதா தத்தே வாணீமுககமல தாம்பூலரஸதாம் 98

### ஞானக்கனி

ஞானக் கனியை உண்ணும் ஆசையில்
நாளும் தவிக்கும் எனக்கு
வானும் மண்ணும் போற்றும் திருவடி
கழுவிய மருதா ணியின்ரச
பானம் என்றோ கிடைக்கும்? அந்நீர்
பருகினால் ஊமையும் பேசுவான்!
கான சரஸ்வதி வாயிதழ் சுவைத்த
சாராய் என்றது மாறும்?

**பாராயண பலன் : ஞானிகளின் ஆசியும் பாராட்டும் கிடைக்கும்,**

ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதிஹரிஸபத்நோ விஹரதே
ரதே: பாதிவ்ரத்யம் சிதிலயதி ரம்யேண வபுஷா
சிரம் ஜீவந்நேவ க்ஷபித பசுபாசவ்யதிகர:
பராநந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத்பஜநவாந் 99

### ஜன்ம சாபல்யம்

உன்னை வணங்கி உன்னருள் பெற்றான்
வாக்கினிலே சரஸ்வதியை அடைவான்
பொன்னுடன் பொருள்சேர லக்ஷ்மியின் கடாட்சமும்
பூரணமாய் பெற்றழக னாகி
மன்மதன் பத்தினி ரதியையும் மயக்குவான்
மகாசக்தி உன்பூஜை மகிமையால்!
ஜன்ம அவித்யைக்கு ஜீவனின் பிணைப்பறுத்து
பேரானந் தத்தைஅனு பவிப்பான்!

**பாராயண பலன் : சிவனருளுக்கு பாத்திரமாகலாம்.**

**ப்ரதீப-ஜ்வாலாபிர்-திவஸ-கர-நீராஜநவிதி:**
**ஸுதாஸூதேச் சந்த்ரோபல - ஜலலவைரர்க்யரசநா**
**ஸ்வகீயைரம்போபி: ஸலில-நிதி-ஸௌஹித்யகரணம்**
**த்வதீயாபிர்வாக்பிஸ்தவ ஜனனி வாசாம் ஸ்துதிரியம்** 100

**சமர்ப்பணம்**

கற்பூர ஒளியாலே கதிரவனை வணங்குதல்போல்
காந்தக்கல் தீர்த்தத்தை சந்திரனுக்கு
அர்ப்பணஞ் செய்வதுபோல் சமுத்திர தேவனை
அந்நீரால் பூஜித்தே அமைவதுபோல்
நற்குண தேவதையே நீயளித்த வாக்கால்
நற்கவி யாத்துன்னைத் துதித்தேன்!
சொற்பொருள் குற்றம் இருப்பின் மன்னித்து
சுகமருள வேண்டுகிறேன் தாயே!

**பாராயண பலன் : தர்மசிந்தனை மேலோங்கும்**

**- மங்களம் -**

## ஆதிசங்கரர் அருளிய

# ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அஷ்டகம்

அம்பா ஷாம்பவி சம்த்ரமெளளிபலா-பர்ணா உமா பார்வதீ
காளீ ஹைமவதீ ஷிவா த்ரினயனீ காத்யாயனீ பைரவீ
சாவித்ரீ னவயெளவனா ஷுபகரீ சாம்ராஜ்யலக்ஷ்மீப்ரதா
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீராஜராஜேஷ்வரீ

அம்பா மோஹினி தேவதா த்ரிபுவனீ ஆனந்த சம்தாயினீ
வாணீ பல்லவபாணி வேணுமுரளீகானப்ரியா லோலினீ
கல்யாணீ உடுராஜபிம்ப வதனா தூம்ராக்ஷசம்ஹாரிணீ
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீராஜராஜேஷ்வரீ

அம்பா னூபுர ரத்ன கம்கணதரீ கேயூர ஹாரான்விதா
ஜாஜீ சம்பக வைஜயந்தி லஹரீ க்ரைவேய வைராஜிதா
வீணாவேணு வினோத மம்டிதகரா வீராசனே சம்ச்திதா
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீராஜராஜேஷ்வரீ

அம்பா ரெளத்ரிணி பத்ரகாளி பகலா ஜ்வாலாமகீ வைஷ்ணவீ
ப்ரஹ்மாணீ த்ரிபுராம்தகீ சுரனுதா தேதீப்யமானோஜ்வலா
சாமுண்டீ ஷ்ரிதரக்ஷ போஷஜனனீ தாக்ஷாயணீ பல்லவீ
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீராஜராஜேஷ்வரீ

அம்பா ஷூலதனு:ம் குஷாம்குஷதரீ அர்தேய பிம்பாதரீ
வாராஹீ மதுகைடப ப்ரஷமனீ வாணீ ரமா சேவிதா
மல்லத்யாசுர மூகதைத்ய மதனீ மாஹேஷ்வரீ அம்பிகா
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீராஜராஜேஷ்வரீ

அம்பா ச்ருஷ்டி வினாஷ பாலனகரீ ஆர்யாதி சம்சேவிதா
காயத்ரீ ப்ரணவாக்ஷரா ம்றுத ரச: பர்ணானு சம்தீ க்ருதா
ஓம்காரீ வினதா சுதார்சிதபதா உத்தண்ட தைத்யாபஹா
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீராஜராஜேஷ்வரீ

அம்பா ஷாஷ்வதி ஆகமாதி வினுதா ஆர்யா மஹாதேவதா
யா ப்ரஹ்மாதி பிபீலிகாம்த ஜனனீ யா வை ஜகன்மோஹினீ
யா பம்சப்ரணவாதி ரேப ஜனனீ யா சித்கலா மாலினீ
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீராஜராஜேஷ்வரீ

அம்பா பாலித பக்தராஜ னிரதம் அம்பாஷ்டகம் ய: படேத்
அம்பாலோல கடாக்ஷ வீக்ஷ லலிதம் ஐஷ்வர்யமவாஹுத
அம்பா பாவன மம்த்ர ராஜ படனாதம்தீஷ மோக்ஷப்ரதா
சித்ரூபீ பரதேவதா பகவதீ ஸ்ரீராஜராஜேஷ்வரீ








சாக்த ஸ்ரீ சத்குரு சிவாச்சாரிய ஸ்வாமிகள்

**ஸ்ரீ தச மஹா வித்யாபீடம் டிரஸ்ட்**

நெ,8/15, தாரகேஸ்வரி நகர் 1வது தெரு,
செம்பாக்கம், சென்னை - 600 073
போன் : 044-22780241
கைபேசி : 7299051505



Book Sponsor :
Smt.Susila Gnanasekaran
Singapore